தனிப் பிரதி
விலை அணா 5.

"கற்றோர்க டாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

வருஷ சந்தா (முன்
பணமாக) ரூ. 3-8.

# விவேகசிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

புத்தகம். III. 1895௵ ஏப்பிரல்௴ இலக்கம் 12.

## NOTICE.

The steady rise in the prices of Paper and Printing Materials and the frequent introduction of illustrations in the Magazine having considerably increased the cost of production, it is found no longer possible to supply the "**Viveka Chintamani**" at reduced rate to any large number of subscribers as hithertofore. The reduced rate will therefore be entirely discontinued from 1st April next and the ordinary advance rate of Rs. 3-8 per annum including postage, will, thenceforth, be made applicable to all subscribers old and new alike. Single Copy As. 5.

*20th March 1895.*

## விளம்பரம்.

காகிதம் அச்சு சாமான்கள் எல்லாவற்றின் விலையும் வரவர மிக அதிகரித்துவிட்டதாலும், அடிக்கடி பத்திரிகையில் படங்கள் போட்டுவருவதாலும் விவேகசிந்தாமணியை அச்சிட்டு வெளிப்படுத்தப் பிடிக்கும் செலவு முன்னைவிட மிகவும் அதிகமாக ஏறி ஓடிவிட்டது. அதனால் பத்திரிகையை இதுகாறும் செய்ததுபோல் அனேகருக்குக் குறைந்த சந்தா விகிதப்படி கொடுத்து வருவது இனிக் கூடாமையா யிருக்கிறது. ஆகையால் வருகிற ஏப்பிரல் மாசம் 1௳ முதல் குறைந்த சந்தா விகிதத்தை முற்றும் நிறுத்திவிட்டு சாதாரண கையொப்ப விகிதமாகிய வருஷத்துக்கு (தபாற் செலவோடு) முன் பணமாக ரூ. 3½ என்பது பழைய கையொப்பக்காரர்கள் புதிய கையொப்பக்காரர்கள் எல்லாருக்கும் ஒரே சீராக ஏற்கும்படி செய்யப்படும். இனி தனிப்பிரதியின் விலை அணா 5.

1895௵ மார்ச் ௴ 20௳.

## ஸர் தாமஸ் மன்றோ பதுமையும், அவர் ஜீவ்ய வரலாறும்.

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று."

அடுத்த பக்கத்துப் படத்தில் சித்திரித்துக் காட்டியிருக்கும் 'மன்றோ ஸ்டாட்யூ' (Munro's Statue) என்னும் பதுமையை சென்னைமா நகர வாசிகள் அனேகமாய் எல்லோரும், மற்றும் இந்நகரைக் கண்காட்சியின் பொருட்டு வந்து கண்ணுற்றுப் போகும் வெளிநாட்டாராகிய அனேகரும் பார்த்திருக்கலாம். இப்பதுமை நாட்டப்பட்டிருக்கும் இடம் கண்ணுக்கு மிகவும் ரமணீயமானது. இந்நகரை ஊடுருவிச்செல்லும் கூவநதி என்னும் ஓர் சிற்றாறு சமுத்திர சங்கமமாவதற்குக் கொஞ்சமேலாக இரண்டு கிளைகளாகப் பிரிந்து இந்நகரினோர் பாகத்தைச் சிறிய தீவாக்கிப் பின்னும் புனைந்து கடலில் பாய்கிறது. இத்தீவின் இருபுறத்திலும் சாலைமரங்கள் அமைந்த 'மவுண்டு ரோட்டு' என்னும் விஸ்தாரமான சாலை கிளைநதிகளை இரண்டு நேர்த்தியான பாலங்களால்* கடந்துகொண்டு தென் வடலாய் ஊடுருவிச்செல்கின்றது. இப்பாதையின் இருபுறத்திலும் கண்களைக் கவரத்தக்க பசும்புற்கள் நிறைந்துள்ள மைதான வெளிகள் இருக்கின்றன. கிழக்குப் பக்கத்தில் இருக்கும் மைதானத்தில் மாலைப்பொழுதில் குதிரைப் பந்தயம்

* தென் புறத்திலிருக்கும் பாலத்திற்கு கவர்னர் மாளிகை வாராவதி என்றும், வடபுறத்துப் பாலத்திற்கு வாலாஜா வாராவதி என்றும் பெயர்.

நடப்பதையும், துரைமார்கள் பந்தயத்திற்காகக் குதி
ரைகளைப்பழக்கிக்கொண்டிருப்பதையும், இவைகளைப்
பார்க்க ஜனங்கள் திரள்திரளாய் கூட்டம் கூடியிருப்
பதையும் பார்க்க வெகு விநோதமா
யிருக்கும். மற்றப் பக்கத்து மைதா
னத்திலோ சேனவீரர்கள் கவாத்துப்
பழகுவதையும், சாயங்கால வேளை
களில் வாலிபர்கள் பந்தடிப்பதையும்
பார்க்கலாம். இத்தீவின் நாலாபக்கத்
திலும் ஆங்காங்கு மரங்களுக்கிடை
யிலேயும், சிற்சில தாழ்ந்த கட்டிடக்
கும்புகளிலேயுமிருந்து ஆகாயத்தை
அளாவி நிற்கும் நகர சபாமண்டபம்
(Victoria Public Hall), சென்னை
இருப்புப்பாதை 'ஸெண்டிரல் ஸ்டே
ஷன்,' 'ஹைக்கோர்ட்டு,' கோட்டைக்
கட்டிடங்கள், சர்வகலாசபை மண்
டபம் (Senate House), கலச மஹா
ல், கவர்னர் மாளிகை முதலான இத்
தகைய மாடகூடங்களினுடைய கோ
புர சிகரங்களின் தோற்றம் நேத்தி
ரோத்ஸவமுண்டாக்கத் தக்க நேர்த்
தியான காட்சியாய்த் தோன்றும்.
இவ்வருமையான தோற்றத்தையுடை
ய இத்தீவின் நடுவில், சாலையின் மத்
தியில் அண்டாகாரமாய் அமைத்த
தும், மனோரஞ்சிதமான பூஞ்
செடிகள் நிறைந்துள்ளதுமான
தோர் மேடையில், கருங்கல்லா
லாக்கியதும், சற்றேறக்குறைய
பூமி மட்டத்திற்கு 25 அடி
க்குமேல் ஸ்தம்பாகாரமாய்
நிற்பதுமான ஓர் அழகிய
பீடத்தில் இந்த மன்ரோ
சிமோனது
பதுமை
யானது
கிழக்கு
நோக்கிய
முகமாய்
ஸ்தாபிக்
கப்பட்டி
ருக்கிறது.
போர்க்



(இப்படத்தில் வெட்டிக்காட்டப்பட்டிருக்கும் லிகிதம் சிலையின் பின்பக்கத்தில் உள்ளது.)

களத்திலும் சற்றேனும் சளைக்காத கம்பீரமுள்
ளதாய்த்தோன்றும் பாராசாரிக் குதிரை ஒன்றின்
பேரில் ஏறி ஓர் கையில் கடிவாளம் பிடித்து மற்
றக் கையில் உருவின கத்தியோடு
எதிரிகளை எதிர்த்துத் தாக்கச் சேனை
யை நடத்தத்தயாராய் வெகு திடசித்
தத்துடன் வீற்றிருக்கிறாற்போல மிக
வும் சிறந்த வேலைப்பாடுடன் நிர்மா
ணித்திருக்கப்பட்ட இப்பதுமை இத்
தீவிற்கு ஒரு நடு நாயகமாகும் திலக
மணிபோல் விளங்குகிறது. இக்காட்
சியின் அருமை பெருமையை அறிந்து
தான் இப்பதுமைக்கு இங்கு இடமளி
த்தார்கள் போலும். இவ்வுருவை அ
னேகர் பார்த்திருப்பினும், இதில் பிம்ப
ரூபமாய் பிரகாசிக்கும் மகா பிரபு
யாவர்? யாது காரணத்தின் பொரு
ட்டு அவருக்கு இப்பதுமை ரூபம் அ
மைக்கப்பட்டு காண்போர் கண்களை
ஆனந்திக்கத்தக்கதும் விசேஷமாய்
ஜனங்கள் நடமாடக்கூடியதுமான
இடத்தில் நாட்டப்பட்டிருப்பது?
இப்பதுமை எவ்வகைப் பொருளால்
அமைக்கப் பட்டுள்ளதோ? இவ்வழ
கிய பதுமையைச் சிற்பித்த சிற்ப வல்
லாளர் யாவரோ? எனமனதில் உதய
மாகும் சில கேள்விகளைக் கரு
த்துடன் கேட்டறிந்துகொண்
டார் சிலரேயுளர்.

கொஞ்சநாளைக்கு முன் ஓர்
தினத்தில் நாம் 'மவு
ண்டு ரோட்' வழியாய்ச்
செல்லுகையில் இப்பது
மை நிற்குமிடத்தில் சற்
று நிதா
னித்து அ
தன் சிற
ந்த லக்ஷ
ணங்களை
யும், வே
லைப்பாட்
டின் திற
த்தையும்
சிந்தித்து

க்கொண்டு அதைக் கண்ணேக்கின வண்ணமாய் நிற்கையில், சமீபத்தில் வந்துகொண்டிருந்த இருவர்களில் ஒருவன் மற்றவனைப்பார்த்து, 'இதென்ன ஆச்சரியம்! கல்லாலோ, செம்பாலோ, இரும்பாலோ செய்யப்பட்ட இந்தப் பாவையை இவர் வெகு ஆச்சரியமாய்க் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருக்கிருரே: என்ன காரணமோ தெரியவில்லை' என்று சொல்ல, அதற்கு மற்றவன் 'அது என்னமோ நான் ஒரு ஆச்சரியத்தையும் காணவில்லை' என்று சொல்லிக்கொண்டே இருவரும் அப்புறம் போனார்கள். நடந்த இச்சம்பாஷணையால் நாம் அதிக வியப்புற்று போகுமவர்களைக் கூவியழைத்து, இப்பிம்ப ரூபமாய் விளங்கும் பிரபு யாவரென்று நீங்கள் அறிவீர்களோ வென்ன, அதில் ஒருவன் 'இவர் பரங்கிப்பட்டாளத்துள் ஓர் தலைவன்; அவன் தன் ஜாதிக்கும் வேலை அந்தஸ்திற்கும் குறைவானதும் அவமானமுண்டாக்கக்கூடியதுமான ஓர் கெடுதொழில் புரிந்ததால் காண்போரெல்லாம் பார்த்து அவமதிக்குமாறு இங்கு அவனுருவைக் காற்றுமழை வெயிலில் அடிபட்டு காக்கை கழுகுகள் தலையில் உட்காரும்படியாக வெட்டவெளியில் நிறுத்தியிருக்கிருர்கள்' என்று புகலக்கேட்டு எமக்கு வெகு நகைப்புண்டாயிற்று. நகைப்புக்குக் காரணம்: படிப்பு, நாகரீகம், சீர்திருத்தம் முதலான இவைகளெல்லாம் நாளுக்குநாள் மேன்மேலும் அபிவிர்த்தியாய்வரும் இக்காலத்திலும் இப்படி தப்பான அபிப்பிராயம் சிலர் கொண்டிருக்கிருர்கள் என்பதே. நாம் அவர்களுக்கு அந்தப் பிரபுவின் சௌரிய ஔதாரிய குணங்களையும் பெருமைகளையும், அப்பதுமையின் சிற்ப சிலாக்கியத்தையும் நன்ருகப் புகட்டிக் காட்டிய பிற்பாடு தங்கள் பிசகான அபிப்பிராயத்தை தவிர்த்து அவர்கள் வழிநோக்கிச் சென்ருர்கள். இப்பதுமையைக் குறித்த பல விஷயங்களைத் தெரிந்துகொள்ள விரும்புவோர்க்கு அவற்றை ஒருவாறு அடியில் சுருக்கிச் சொல்வோம்.

### ஸர் தாமஸ் மன்றே சரித்திரம்.

மேற்சொன்ன பதுமை ரூபத்தில் காணப்படுமவர் யாரென்ருல், நமது சென்னை ராஜதானியில் 1820-ம் வருஷம் முதல் 1827-ம் வருஷம் வரையில் கவர்னராயிருந்து அதிகாரம் செலுத்திவந்த ஸர் தாமஸ் மன்றே என்னும் கனவான். இவருடைய சரித்திரத்தைப் படிப்பதால், ஒருவன் எவ்வளவு எளியவனுயிருந்தாலும் விடாமுயற்சியும், புத்திசாதுரியமும், எடுத்தகாரியத்தைக் கருத்தாய்ச்செய்து முடிக்கும் குணமும் அவனுக்கு இருக்குமேயானுல் கடைசியில் நல்ல பதவியை அடையலாமென்பது நன்ருய்ப் புலப்படுகிறது.

"வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு."

இவர் இங்கிலாந்தை யடுத்த ஸ்காட்லாந்தில் உள்ள கிளாஸ்கோ (Glasgow) என்னும் பட்டணத்தில் 1761-ம் வருஷம் மே-மீ 27-உ பிறந்தவர். இவர் தந்தையாகிய அலெக்ஸாந்தர் மன்ரூ என்பவர் ஒரு வியாபாரி. தாமஸ் மன்ரூ பதினறு வயதிற்குள்ளாகவே கிளாஸ்கோ சர்வகலாசாலையில் படித்து கணிதம், இலக்கணம், சரித்திரம் முதலான சாஸ்திரங்களில் மிகத்தேர்ச்சியடைந்தார்.

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு."

போர்வீரருக்கும், ராஜரீக காரியங்களைச் சரிவர நடத்துவோருக்கும் வேண்டியவையான தேககாத்திரமும், வலிமையும், விசேஷ சுருசுருப்பும், ஆத்தும பரித்தியாகமும், மனேதைரியமும் இவரிடத்தப் பால்யத்திலேயே நன்ருய் விளங்கியது. 1777-ம் வருஷத்தில் ஒரு வர்த்தகரிடத்தில் இவர் குமஸ்தாவாக அமர்த்தப்பட்டார். பிறகு அடுத்த வருஷத்திலேயே அவர் தகப்பனர் வியாபாரம் நசித்துப்போய் மிகவும் எளியவராய்விட்டபடியால் தாமஸ் மன்ரூ தன்வேலையை விட்டுவிட்டு 'ஈஸ்டுஇந்தியா கம்பெனி' யாரிடத்தில் ஒரு படையாளாக்ச்சேர்ந்து இந்தியாவுக்குவரும் அவர்கள் கப்பலொன்றில் பிரயாணப்பட்டு வரவேண்டியதாயிற்று. போர்ச்சேவகனுயமர்ந்தும் பிரயாணச் செலவுக்கு பணம் கொடுக்க வகையில்லாததினல் அதற்கு ஈடாகக் கப்பலில் ஓர் சாமானிய மாலுமியாக வேலைசெய்து 1780-ம் வருஷம் ஜனவரி-மீ 15 உ சென்னப்பட்டணம் வந்துசேர்ந்தார். இந்தியாவில் வந்ததும் இவருக்கு ஏற்பட்ட சம்பளம் 28-ரூபாய். இச்சொற்ப வரும்படியுடன் அவருக்குண்டான சௌக்கியக்குறைவைச் சொல்லவும் வேண்டுமோ. மாதமொன்றுக்கு வேலைக்காரனுக்கு 7-ரூபாயும், சமையற்காரனுக்கு 3½-ரூபாயும், வண்ணனுக்கு 3½-ரூபாயுமாகக் கொடுக்கவேண்டியிருந்ததால் இவர் மற்ற செலவுகளை 14-ரூபாயிலேயே நடத்திக்கொள்ளவேண்டியதாயிருந்தது. புசிக்கச் சரியான போஜனமில்லாமலும், உடுக்கச்சரியான உடையில்லாமலும் வெகுவாய்த் தரித்திரத்தின் கொடுமையால் அவதிப்பட்டார். அவர் தன் சகோதரிக்கு எழுதின ஒரு கடிதத்தில் தான் இந்தியாவுக்குவந்து 3-வருஷங்கள் வரையிலும் ஒரு கோணியின்மேல் புஸ்தகத்தை தலையணையாக வைத்துக்கொண்டு நித்திரைசெய்துவந்ததாக எழுதியிருக்கிருர்.

இவர் வந்த கொஞ்சகாலத்திற்குப் பிற்பாடு கம்பெனியாருக்கும், மைசூர் சுல்தானகிய ஐதர் அலிக்

றும் போர் உண்டாயிற்று. 1780-ம் வருஷம் முதல் 1784-ம் வருஷம் வரையில் நடந்த மைசூர் யுத்தத்தில் நேர்ந்த போர்டோ நோவோ, பாலிலோர், சோளிங்கர், சித்தூர், ஆரணி, கூடலூர் முதலான சண்டைகளிலேயும், சிதம்பரம், திருப்பாசூர், கூடலூர் முற்றுகைகளிலேயும் இவர் படையாளாகப் போர்த்தொழில் புரிந்திருக்கிறார். இவருடைய சவுரியத்திற்காக 1786-ம் வருஷம் இவருக்குப் பட்டாளத்தில் 'லெப்டினண்டு' என்னும் அந்தஸ்து அளிக்கப்பட்டது. 1786-ம் வருஷம் முதல் 1792-ம் வருஷம் வரையில் ஐதர் ஆலியின் மகனாகிய திப்புசுல்தானுடன் நடந்த மைசூர்யுத்தத்தில் இவர் இருந்து சண்டை செய்திருக்கிறார். சண்டையில் திப்பு தோல்வியடைந்தபடியால் சீரங்கபட்டணத்தில் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டான். இதன் பிரகாரம் சேலம் ஜில்லாவில், கிருஷ்ணகிரி, தர்மபுரி, ஊத்தன்கரை, திருப்பத்தூர் முதலிய தாலூக்காக்கள் அடங்கிய பாகமாகிய 'பாராமகால்'* கம்பெனியார் வசமாயிற்று. அப்போது 1792-ம் வருஷம் ஏப்பிரல் மாதம் இந்த 'பாராமகாலுக்கு' ரீட் துரையுடன் இவர் உதவிக்கலெக்டராக நியமிக்கப்பட்டார். ஐதர், திப்பு இவர்களுடைய கொடுங்கோன்மையால் சீர்கெட்டிருந்த இந்த பாகத்தைத் திருத்தம் செய்து, இப்போது இச்சென்னை ராஜதானியில் நடந்துவரும் 'ரயத்துவாரி ஸிஸ்டம்' என்னும் குடிமிராசு ஏற்பாட்டை நிலத்தீர்வையின் பொருட்டு இவரே 'பாராமகாலில்' முதல் முதல் புதிதாய் ஸ்தாபித்தார். இவர் இங்கே இருக்கும்போது கட்டுவித்த சத்திரங்களும், வெட்டுவித்த குளங்களும், இவரால் ஏற்படுத்தப்பட்ட சாலை மரங்களும், இவர் தனக்குள்பட்ட குடிகளிடத்தில் வெகு அன்பு பாராட்டி வந்ததற்கு அறிகுறியாக இன்றும் விளங்குகின்றன. 1796-ம்வருஷம் இவருக்கு 'காப்டன்' என்னும் அந்தஸ்து கொடுக்கப்பட்டது. 1799-ம் வருஷம் மார்ச்சு மாதம் திப்பு மறுபடியும் போர் துவக்கவே, இவர் கலெக்டர்வேலையை விட்டு சீரங்கபட்டணம் முற்றுகையின் பொருட்டு ஜெனரல் ஹாரிஸ் என்பவருக்கு உதவியாக வரவேண்டியதாயிற்று. பிற்பாடு இவர் மைசூர் நிலத்தீர்வை முதலான விஷயங்களைக்குறித்து ஏற்படுத்தப்பட்ட காரியதரிசிகளில் ஒருவராக நியமிக்கப்பட்டார். இந்த வேலை மேற்சொன்ன வருஷம் ஜூலை மாதத்துடன் முடிந்துபோகவே, புதிதாய் அப்போது தான் கம்பெனியாருக்குக் கிடைத்த கன்னட ஜில்லாவுக்கு உடனே கலெக்டராக தாமஸ் மன்றோ கவர்னர் ஜெனரல் அவர்களால் தெரிந்தெடுக்கப்பட்டார். நிலை குலைந்திருந்த இந்த நாட்டில் இவர் கலெக்டராயிருந்த 15-மாதங்களுக்குள், அவ்விடமிருந்த கொடுங்கொள்ளைக்கூட்டங்களை வேரோடுகளைந்தும், சர்க்காருக்கு வரவேண்டிய தீர்வைகளைக்குறித்து குடிகளுக்கு தொந்தரவில்லாத ஏற்பாடுசெய்தும், அந்நாடு முழுவதையும் நீதியான ஆட்சிக்குள்ளாக்கினார். இவர் கன்னட நாட்டை நேரான நிலைமைக்குகொண்டு வருவதற்காக எடுத்துக்கொண்ட விசேஷ முயற்சியின் பொருட்டு மேஜர் என்னும் அந்தஸ்திற்கு உயர்த்தப் பெற்று, நிஜாமால் கம்பெனியாருக்குக் கொடுக்கப்பட்ட, 'விடுபட்ட நாடுகள்' (Ceded Districts) என்று இப்போதும் வழங்கிவரும் பல்லாரி, கடப்பை, கர்நூல், அநந்தபூர் ஜில்லாக்களுக்குக் கலெக்டராக இவரே தகுந்தவரென்று 1800-ம் வருஷம் நவம்பர் மாதம் கிளைவ் பிரபு அவர்களால் நியமிக்கப்பட்டார். இவர் இவ்வதிகாரத்தைக் கைக்கொண்டதும், அந்நாடுகள் முழுவதும் கொள்ளையே கருத்தாய்த் துவம்ஸம் செய்துவந்த 80-பாளையக்காரர்கள் அல்லது சிற்றரசர்களை அடக்கி, அவர்களிடமிருந்த ஏராளமான சிப்பாய்ப் பட்டாளங்களையும் கலைத்துவிடும்படி செய்தார். கொடுங்கொள்ளையும் கொலைகளும் ஒடுங்கி ஜனங்களுக்குள் அமைதி உண்டாகவே, பல நிலங்களையும் அளவிட்டு அதற்குச் சரியான தீர்வையும் ஏற்படுத்திச் சர்க்கார் வரி குந்தகமில்லாமல் வந்து சேரும்படியான ஏற்பாடுகளையும் செய்தார். இவர் கடப்பை முதலான இடங்களில் இருந்த காலத்தில் அதிக மழையால் சற்றேறக்குறைய 1000-ஏரிகளும், 800-வாய்க்கால்களும் உடைந்து சிதறுண்டு போகவே, 7-லக்ஷம் ரூபாய் வரையில் அவைகளைச் செப்பனிடுவதில் செலவிட்டு குடிகளுக்குப் பேருதவி புரிந்தார். அப்போது இவருக்கு 'கர்னல்' என்னும் பதவியும் அளிக்கப்பட்டது.

இதுவரையிலும் ஏறக்குறைய 28-வருஷங்களாய்க் கொஞ்சமேனும் ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் குடிகளுடைய நன்மையையே நாடி உழைத்து வந்ததில் இவருக்குத் தேகம் கொஞ்சம் பலஹீனமாகவே, தாய் தந்தையர் முதலானவர்களைப் பார்க்கச் சீமைக்குப் போகவேண்டுமென்று எண்ணமுண்டாயிற்று. ஆனால் இதுவரையில் தன் பெற்றோர்களை மறந்திருந்தாரோ? இல்லை. அவர்களுக்கு வேண்டுமான பொருள் அப்போதைக்கப்போது அனுப்பிக்கொண்டிருந்ததோடுகூட, அவர்கள் வசிப்பதற்கு வசதியான ஓர் வீடும் வாங்கிக்கொடுத்து, வறுமையிலிருந்தும் விடு

* பாராமகால் என்பதற்கு 12-அரண்மனைகள் என்று பொருள், அதாவது பன்னிரண்டு சிற்றரசர்கள் அரசாட்சி செய்துவந்த நாடு என்று அருத்தமாகும்.

வித்துச் சௌக்கியமான ஸ்திதியில் வைத்திருந்தார். 1807-ஆம் அக்டோபர்-மீ தன் கலெக்டர் வேலையை ராஜினமாக் கொடுத்துவிட்டுச் சீமைக்குப் பிரயாணமாய் அவ்விடம் 1808-ஆம் ஏப்பிரல்-மீ போய்ச் சேர்ந்தார். சேர்ந்தும் அவர் ஆவலுடன் எண்ணிப் போன காரியம் கைகூடாமற் போயிற்று. அவர் இந்தியாவைவிட்டுப் புறப்படும் சில மாதங்களுக்கு முன்னதாகவே அவர் தாயார் தேகவியோகமடைந்துவிட்டாள். மன்ரோ அவர்கள் உத்தியோகத்தில் மேன்மேலும் பெருமைப்பட்டு வருவதை அதிக ஆவலுடன் கேட்டுக்களித்துவந்த அவர் தகப்பனரோ இப்போது விர்த்தாப்பியத்தால் மெய்தளர்ந்து மனோதிடனற்றவராயிருந்தார். ஆகவே தனது அருமைத் தாய் தந்தையரோடு குலாவிக்குதூகலிக்க வகையில்லாமற்போயிற்று. இவர் இங்கிலாந்தில் இருக்குங்காலத்தில், இந்தியாவில் நிலத்தீர்வை, நியாயவிசாரணை, போலீசு முதலான முக்கியமான விஷயங்களை சரிவர நடத்த ஏற்பட்டுள்ள நரைத்தன விசாரணைகளைக் குறித்துப் பார்லிமெண்டில் கேள்வியுண்டாகவே, அவ்விடத்தில் தாமஸ் மன்ரோ அவர்களால் சொல்லப்பட்ட விஷயங்களே அவருடைய விஸ்தீரண நோக்கத்திற்காகவும், அவர் விடைகளின் தீவிர யுக்தி சாதுரியத்திற்காகவும் மற்றவர்கள் எடுத்துக்காட்டிய விஷயங்களைக்காட்டிலும் மேலாகக் கொள்ளப்பட்டன. இவர் சீமையில் 6-வருஷகாலம் இருந்த பிற்பாடு, இந்தியாவில் நியாயவிசாரணை ஏற்பாடுகள் விஷயமாய்த் தீர விசாரித்து அதைச் சீர்திருத்தும்படி பார்லிமெண்டாரால் ஏற்படுத்தப்பட்ட ஒரு 'கம்மிஷனுக்கு' அக்கிராசனுதிபதியாய் நியமிக்கப்படவே 1814-ஆம் ஜூன்-மீ சீமையைவிட்டுப் புறப்பட்டு செப்டெம்பர்-மீ சென்னைவந்து சேர்ந்தார். புறப்படுவதற்குச் சில மாதங்களுக்குமுன் இவருக்கு கலியாணம் ஆயிருந்தபடியால் மன்ரோ துரைசானியும் கூடவந்தார். மேற்குறித்த கம்மிஷனில் விசேஷமுயற்சி எடுத்துக்கொண்டு நியாயவிசாரணையைக்குறித்த ஏற்பாடுகளில் அனேகம் சீர்திருத்தங்களை இவர், குறித்த காலத்திற்குள்ளாகவே செய்துமுடித்தார்.

பிற்பாடு, பூனவில் நடந்த உடன்படிக்கையின் பிரகாரம் பேஷ்வாவால் கம்பெனியாருக்கு விடப்பட்ட தென் மகாராஷ்டிர தேசத்தின் ஓர் பாகத்திற்கு கர்னல் மன்ரோ கம்மிஷனராக அனுப்பப்பட்டார். டார்வாருக்குப்போய் வேலையை ஏற்றுக்கொண்ட கொஞ்சகாலத்திற்குள், பேஷ்வாவுடன் நடந்த உடன்படிக்கையின் பிரகாரம் 1817-ஆம் அக்டோபர்-மீ சந்தூர் ராஜ்ஜியத்தைக் கைப்பற்றும்பொருட்டு அவ்விடத்திற்குப் படையெடுத்துப்போனர். இவர் வரவைக் கண்ட சந்தூர் ராஜன் இவரை தஞ்சமென்று அடையவே அவனிடத்தில் உடன்படிக்கை செய்துகொண்டு அவனைத்திரும்பவும் ராஜ்ஜியத்தில் ஸ்தாபிக்கவும் ஏற்பாடு செய்தார். இதற்குள் பேஷ்வா மறுபடியும் போர் துவக்கினதால் அவன் நாட்டின்பேரில் மன்ரோ படையெடுத்துச் செல்லவேண்டியதாயிற்று. 1818-ஆம் ஜனவரி-மீ இவர் பேஷ்வாவினுடைய அரண ஸ்தானங்களில் முக்கியமானதான கடாக், தாமல், ஹூப்லி முதலான இடங்களைக் கைப்பற்றிக் கொண்டார். பிற்பாடு ஏப்மிரல்-மீ பேஷ்வாவின் முக்கிய ராணுவஸ்தலமாகிய பெல்காமையும், மே மாதத்தில் ஷோலாப்பூரையும் பிடித்துக்கொண்டார். ஷோலாப்பூர் பிடிபடவே பேஷ்வா மனம் தளர்ந்து கம்பெனியாரிடத்தில் அடைக்கலமானன். ஆகவே தென் மகாராஷ்டிரம் முழுவதும் கம்பெனியார் ஆட்சிக்குள் வந்துவிட்டது. மன்ரோ இந்த ராஜ்ஜியத்தைக் கைப்பற்றினதோடுகூட வெகு சீக்கிரத்தில் அவ்விடத்தில் நீதியான ஆட்சியும், குடிகளுக்குள் ஓர் அமைதியும் உண்டாக்கி அதிக கீர்த்திப்பிரதாபங்கள் பெற்ருர். இவர்பட்ட சிரமத்தில் தேக சௌக்கியம் கெட்டு பலஹீனமடையவே தன்வேலையை ராஜீனமாக் கொடுத்துவிட்டு சீமைக்குப்போக பெங்களூர் மார்க்கமாய்ச் சென்னைக்குச் சென்ருர். இப்போது இவருக்கு 'ஜெனரல்' பட்டமும் அமைந்தது.

சென்னையை விட்டு 1819-ம் வருஷம் ஜனவரி மாதம் தாமஸ் மன்ரோவும், மன்ரோ துரைசானியும் புறப்பட்டுப்போனர்கள். போகும் வழியில் மன்ரோ சீமாட்டிக்கு ஒரு ஆண்குழந்தை பிறந்தது. ஜூன் மாதக்கடைசில் எல்லோரும் இங்கிலாந்தை அடைந்து தங்கள் சுயதேசமாகிய ஸ்காட்லாந்துக்குப் போய்ச்சேர்ந்தார்கள். இவருடைய கீர்த்தியோ இவருக்கு முன்னல் பார்லிமெண்டு சபைக்கு எட்டி, அவ்விடத்தில் இவருடைய சாமார்த்தியத்திற்காகவும், புத்திவலிமைக்காகவும் மிகவும் புகழப் பெற்று ஹியூ எல்லியட்துரை யவர்களுக்குப் பிற்பாடு சென்னை கவர்னர் வேலைபார்க்கத் தகுந்தவர் இவரேஎன்று நிச்சயிக்கப்பட்டது. மன்ரோவுக்கு இந்தியாவுக்குப் புறப்படுமுன் 1818-ம் வருஷம் அக்டோபர் மாதம் 'கம்பானியன் ஆப் தி பாத்' (C. B.) என்னும் பட்டமும், 1819-ம் வருஷம் ஆகஸ்ட்டு மாதம் 'மேஜர் ஜெனரல்' என்னும் அந்தஸ்தும், கவர்னர் வேலையை ஏற்றுக்கொண்ட பிற்பாடு 'கே. ஸி. பி.' (K. C. B.) பட்டமும் கொடுக்கப்பட்டன. கம்பெனியின் 'டைரெக்டர்களால்' இவருக்குப் பிர

யாண விருந்தளிக்கப்பட்டபோது, இவர் செய்த நன்மைகளையும், இங்கிலாந்துக்குச் செய்த உபகாரங்களையும் குறித்து அப்போது முக்கிய அத்தியக்ஷராயிருந்த கானிங்துரை நன்கு மதித்துப்பேசினர். ஸர் தாமஸ் மன்றோவும், மன்றோ சீமாட்டியும் குழந்தையுடன் 1819-ம் வருஷம் டிசம்பர் மாதம் சீமையை விட்டுப்புறப்பட்டு பம்பாய் மார்க்கமாய் 1820-ம் வருஷம் ஜூன் மாதம் 8-ம் தேதி சென்னைவந்து சேர்ந்து கவர்னராகவேலையை ஒப்புக்கொண்டார்.

"குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்."

என்றபடி, இவர் சென்னை ராஜதானிமுழுவதும் குற்றங்கள் கண்டிக்கப்பட்டு சரியான நியாயம் கிடைக்கும்படியாய் அங்கங்கே நியாயஸ்தலங்களை ஸ்தாபித்தார். உள்நாட்டு அதிகாரம் சீராய் நடந்துவரும்படி அந்தந்த வேலைக்குத் தக்கபடி ஐரோப்பியரையும் இந்துக்களையும் நியமித்துப் பார்த்துவந்தார். இந்துக்களுக்கு இங்கிலீஷ்த் துரைத்தனத்தில் பிரியம் உண்டாவதற்காக அவர்கள் தொன்று தொட்டு அனுசரித்துவரும் கொள்கைகளிலேயும், வழக்கங்களிலேயும் பிரவேசிக்காமல் இருந்ததோடுகூட அவைகளைப் பாதுகாத்தும்வந்தார். மேலும் இவர் இந்துக்கள் மதவிஷயத்திலே பிரவேசித்தவரல்ல. 1822-ம் வருஷத்தில் பல்லாரியில் இருந்த 'சப்கலெக்டர்' தன் உத்தியோக அதிகாரத்தைப் பாதிரித் தொழிலில் செலுத்தி அவ்விடத்து ஜனங்களை கிறிஸ்தவர்களாக்க முயன்றபோது அந்தக் கலெக்டரைக் கண்டித்து அவர் செய்யப்புகுந்தது தகாதசெயலென்றும், மத சம்பந்தமான விஷயங்களில் துராகிர்தமாய்ப் பிரவேசிப்பது பலதீமைகளை விளைவிக்கும் கொடிய கலகங்களுக்கிட முண்டாக்குமென்றும் வற்புறுத்தினர். சர்க்காரைச்சேர்ந்தஎல்லா இலாகாக்களிலும் விசேஷ சீர்திருத்தங்கள் செய்து அங்கிலேய துரைத்தனத்தை பலரும் மெச்சிப்புகழும்படி செய்தார். சுதேசிகளின் வித்தியாபிவிர்த்தியின் பொருட்டு ஒவ்வொரு ஜில்லாவிலும் இந்துக்களுக்காக ஒரு பாடசாலையும், மசம்மதியருக்காக ஒரு பாடசாலையும், ஒவ்வொரு தாலூக்காவிலும் ஒரு பாடசாலையும் ஏற்படுத்தினர்.

"முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறை யென்று வைக்கப் படும்."

"கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
முடையானும் வேந்தர்க் கொளி."

இக்காலத்தில் முக்கியமான இடங்களுக்கெல்லாம் ரயிலும், நல்லபாதையும் இருப்பதால் வெகு சலீசாய் பிரயாணம் செய்யலாம். முற்காலத்திலோ அப்படி அல்ல. நல்ல சாலைமுதலான தொன்றுமில்லாமல் சாமானிய வண்டிகளிலேயேவெயிலிலும், காற்று மழையிலும் அடிபட்டு யாத்திரை செய்யவேண்டியதாயிருந்தது. அப்படியிருந்தும் ஸர் தாமஸ் மன்றோவுக்கு ராஜதானிமுழுவதும் அடிக்கடி சுற்றிப்பார்த்து அங்கங்குள்ள குறைகளைத் தவிர்ப்பதில் வெகு பிரியமானதால் அவற்றையெல்லாம் பாராட்டவில்லை. இவர் 1821-ம் வருஷம் தான் முதலில் கலெக்டராயிருந்த 'பாராமகா'லுக்குப்போய் விசாரணைசெய்து வந்தார். 1822-ம் வருஷம் சென்னப்பட்டணத்திலிருந்து நெல்லூர் மார்க்கமாய் கஞ்சம் ஜில்லாவுக்குப்போய் திரும்பி விஜயநகரம், வெங்கிடகிரி, காளஹஸ்தி ராஜாக்களுக்குப் பேட்டி அளித்து வந்தார். 1823-ம் வருஷம் கடப்பை, பல்லாரி முதலான ஜில்லாக்களில் சுற்று விசாரணைசெய்தார்.

1824-ஆ முதல் 1826-ஆ வரையில் நடந்த பர்மா யுத்தத்தில் தாமஸ் மன்றோ அவர்கள் சென்னப்பட்டணத்திலிருந்து பட்டாளம், எருது, படகு, கப்பல், இன்னும் மற்றும் வேண்டுமானவைகளெல்லாம் அவ்விடத்திற்கு அனுப்பி பங்காள கவர்ன்மெண்டாருக்கு உதவிசெய்தார். மேலும் அந்த யுத்தத்திற்கு வேண்டிய யுக்தி ஆலோசனைகளைக்குறித்து கவர்னர் ஜெனரலாயிருந்த அம்ஹெர்ஸ்ட் பிரபுவுக்கு அடிக்கடி கடித மூலியமாய் எழுதிவந்தார். போரும் அனுகூலமாய் முடியவே சென்னை கவர்னராகிய ஸர் தாமஸ் மன்றோ அவர்கள் புரிந்த பேருதவிக்காக அவருக்கு 'பாரன்' (Baron) என்னும் பட்டம் கொடுக்கப்பட்டது. இதுவுமல்லாமல் அடுத்த முறை கவர்னர்-ஜெனரல் வேலையை இவருக்கே கொடுப்பதாகத் தீர்மானமும் செய்யப்பட்டது.

இவருடைய தேகஸ்திதி பலக்குறைவுபட்டு வந்ததால் 1826-ஆ கவர்னர் வேலையை ராஜீனமாக கொடுத்துவிட்டு சீமைக்குத் திரும்பிப் போவதற்காகக் கம்பெனியாரை எழுதிக் கேட்டுக்கொண்டார். இதற்குள் 1823-ஆ செப்டெம்பர்-மீ பிறந்த இவர் இரண்டாவது குழந்தைக்கு தேகஸ்திதி அனுகூலமில்லாதிருந்ததால், சௌக்கியத்திற்காக மன்றோ சீமாட்டி குழந்தையுடன் முன்னதாகவே சீமைக்குப் போகவேண்டியதாயிற்று. (ஐயோ பாவம்!! அடுத்த வருஷத்திலேயே மன்றோ பிரபு இந்த இந்தியா மண்ணுக்கிரையானதால், மன்றோ சீமாட்டிக்குத் தன் நாயகனைத் திரும்பவும் பார்க்க வகையில்லாமற் போயிற்று.) 1826-ஆ, இவர் செங்கல்பட்டு, தென் ஆற்காடு, தஞ்சாவூர், திருச்சினப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி, கோயமுத்தூர் ஜில்லாக்களைச் சுற்

றிப் பார்த்துக்கொண்டு நீலகிரி வந்துசேர்ந்தார். பின்பு நீலகிரியிலிருந்து பெங்களூர் மார்க்கமாய் காவேரியின் நீர் வீழ்ச்சியைக் கண்டுகளித்து பட்டணம் போய்ச்சேர்ந்தார். தன் அதிகாரத்தை ஏற்றுக்கொள்ள மற்றோர் கவர்னர் வரத் தாமதப்படுமென்று அறிந்து கடைசித்தடவையாய் கடப்பை, பல்லாரி ஜில்லாக்களுக்குப் போய்ப்பார்த்து வரும்படி 1827-ம் வருஷம் மே-௴ சென்னையிலிருந்து பிரயாணப்பட்டார். அனந்தப்பூரில் சிலகாலமிருந்த பிற்பாடு கவர்னரும் பரிவாரங்களும் ஜூலை-௴ 4-௳ குத்திக்கு வந்துசேர்ந்தார்கள். இவ்விடத்தில், அவருடன் வந்த சிப்பாய்களில் அனேகர் வாந்திபேதி என்னும் கொள்ளை நோயால் மடிந்தார்கள். மறுதினமே கவர்னரவர்கள் அவ்விடம்விட்டுப் புறப்பட்டு கர்நூல் ஜில்லாவைச்சேர்ந்த பள்ளிகொண்டாவுக்கு 6-௳ வந்துசேர்ந்தார். வந்துசேர்ந்து கொஞ்சநேரத்திற்கெல்லாம் திடீரென்று உபாதிகண்டு, தென் இந்தியாவுக்கு ஓர் பேருபகாரியாயிருந்த இச்சீமானும் இக்கொள்ளை நோய்க்கு அன்றையதினம் இராத்திரி 9½-மணிக்கெல்லாம் இரையானார். உடனே அவர் பிரேதம் குத்திக்குக் கொண்டுபோகப்பட்டு அவ்விடத்து அழகிய மலையின் கீழுள்ள அங்கிலேயக் கல்லறை முற்றத்தில் சேமிக்கப்பட்டது. பிற்பாடு இதை 1831-௵ ஏப்பிரல்-௴ மறுபடியும் திறந்தெடுத்து, சென்னப்பட்டணம் கொண்டுவந்து செண்ட் ஜார்ஜ் கோட்டைக்குள் இருக்கும் செண்ட்மேரி கோவிலில் கவர்னர் பீடத்திற்கு எதிரே அடக்கம் செய்யப்பட்டது. இதற்கருகாமையில் மன்றோ சீமாட்டியால் ஒரு சித்திரபீடமும் அதன்பேரில் மன்றோ பிரபுவின் மார்பளவு கற்சிலையும், ஞாபகசின்னமாய் ஏற்படுத்தப்பட்டது.

மன்றோ பிரபுவின் மரணசமாசாரம் சென்னைக்கு எட்டவே அங்குள்ளோர் அனைவரும் தங்கள் உற்றார் இறந்ததாகவே மதித்து விசனமுற்றார்கள். துரைத்தனத்தாரோ 1827-ம் வருஷம் ஜூலை மாதம் 9-ம் தேதி பிரசுரித்த சர்க்கார்ப் பத்திரிகையில் மன்றோ பிரபுவின், விசேஷபுத்தி யூகத்தைக்குறித்தும், சிறப்பான சாமர்த்தியத்தைக் குறித்தும், விடாமுயற்சி, நற்குணம், காருண்யம் முதலாகிய குணங்களைக் குறித்தும் வெகுவாய்ச் சிலாகித்து எழுதி அவர் மரணத்தால் நாட்டுக்கு உண்டாகிய பெருநஷ்டத்தைக் குறித்து மிகவும் வருத்தப்பட்டார்கள். பள்ளிகொண்டாவில் இந்தச் சீமான் உயிர்துறந்த இடத்தில் துரைத்தனத்தார் அவர் ஞாபக சின்னமாக ஒருதோப்பும் துரவும் ஏற்படுத்தினார்கள். குத்தியிலோ மன்றோ அவர்கள் பேரால் ஒரு குளமும், பெரிய சத்திரமும் கட்டினார்கள். இச்சத்திரத்தில் வெகுகாலம் வரையில் அன்னதானம் செய்துவந்தார்கள். ஸர் மார்ட்டின் ஷீ (Sir Martin Shee) என்னும் சிற்பியால் சித்திரிக்கப்பட்ட அவர் படம் ஒன்று அதில் மாட்டப்பட்டிருப்பதை இன்றும் காணலாம். சென்னை 'ரெவினியூ போர்ட்' கச்சேரியிலும், பல்லாரி, கடப்பை முதலான இடங்களிலுள்ள கச்சேரிகளிலும் இவர் படத்தைப் பார்க்கலாம். நீதிமானும் பரோபகாரியும், கபடமில்லாதவரும், பச்சாதாப குணமுள்ளவருமான இந்தப் பிரபுவின் மரணத்தால் உண்டான துக்கத்தை வெளியிடுவதற்காகவும், தங்களுடைய சீர்திருத்தத்திலும், நன்மையிலும் முக்கிய கருத்துள்ளவராய் உழைத்து வந்த இவருடைய ஞாபகம் என்றும் நிலைநிற்பதற்காகவும் ஏதாவது ஏற்பாடு செய்யக்கருதி சென்னை நகரவாசிகள் அனைவரும் ஒரு பெருஞ்சபை கூடினார்கள். அவர் பட்ட பரிசிரமத்திற்காக அவர் பெயர் என்றும் அழியாப் புகழ்பெற்றோங்கும்படியாய் அவருடைய பிரதிமை ஒன்று நிருமாணிக்கப்பட்டு அனைவரும் பார்த்துக் களிக்கும்படியான இடத்தில் ஸ்தாபிக்கப்படவேண்டுமென்று எல்லோரும் ஏகோபித்த மனதாய்த் தீர்மானித்தார்கள். இதன் பிரகாரம், சீமையில் அக்காலத்தில் அதிக கீர்த்திபெற்ற சிற்பியாகிய ஸர் பிரான்ஸிஸ் சான்ட்ரி (Sir Francis Chantrey) அவர்களால் சென்னை நகரவாசிகளின் வேண்டுகோளின்படி மன்றோ பிரபு குதிரையின் பேரில் வீற்றிருக்கும் வண்ணமாய் பிரதிமை ஒன்று நிருமாணிக்கப்பட்டு 1839-௵ சென்னைக்குக் கொண்டுவரப்பட்டது. இது அந்த வருஷம் அக்டோபர் மாதம் 23-௳ விசேஷ வைபவத்துடன், மேலே விவரமாய் எடுத்துச்சொல்லப்பட்டிருக்கும் சென்னையில் அதிக நேர்த்தியான காட்சியமைந்த பாகமாகிய தீவில் ஸ்தாபிக்கப்பட்டது.

இது வரையில் ஸர் தாமஸ் மன்றோ அவர்களுடைய சரித்திரத்தைப் பற்றிச்சொன்னோம். அடுத்த சஞ்சிகையில் மன்றோ பதுமை எவ்வகைப் பொருளால் ஆக்கப்பட்டுள்ள தென்பதையும், அதை நிருமித்த சிற்பியின் சரித்திரத்தையும் சுருக்கமாகக் கூறுவோம்.

ஏ. எஸ். விசுவநாதைய

## பழமொழிகள்.

நமது தர்மசாஸ்திரங்கள் எப்படி உற்பத்தியாயின? திடீர் என்று எடுத்ததும் தர்மசாஸ்திரங்களாக வந்து நிற்கவில்லை. எவ்வளவோ அபிமானத்தால் பிரஹ்மாவே சொல்லி அவருடைய பிள்ளையாகிய **மனு** என்பவர் மானவதர்மசாஸ்திரம் எழுதினர் என்று நாம் ஒருவாறு ஒவ்வொரு ஸமயத்தில் சொல்லிக்கொண்டிருந்தபோதிலும் சரித்திரக்கண்ணாலும், ரோமாபுரி, யவன தேசம் முதலிய இடங்களில் அங்கங்குள்ளோர்களுக்கு ஏற்பட்டிருக்கும் தர்மசாஸ்திரங்களின் சர்ச்சையாலும் நாம் பரிசோதித்துப் பார்த்தால் அநேக பழயவழக்கங்கள் ஒவ்வொரு நாட்டிலிருந்ததாகவும், அந்த வழக்கங்கள்,—எந்த வழக்கங்களை நாம் மாமூல் என்று ஒவ்வொரு சமயத்தில் சொல்லுகிறோமோ அந்த வழக்கங்கள்—தர்மசாஸ்திரங்கள் ஏற்படும் முன்ன மிருந்திருப்பதாகவுந் தெரியவருகிறது. இவ்விதவழக்கங்கள் அதிகப்படவே, இனி ஓர்வித ஏற்பாடில்லாவிட்டால் இந்த வழக்கங்கள் எண்ணிலடங்காதென்ற சமுசயம் வந்தது. அவ்விதசமுசயம் வந்தபோது தான் ஸ்மிருதிகள் ஏற்படும்படி நேரிட்டன.

இவ்வளவு தூரம் நாம் இங்கு ஸ்மிருதிகளையும் தர்மசாஸ்திரங்களையும் பற்றி சொல்லியதற்குக் காரணம் நாமிப்போது ஆரம்பிக்கும் "பழமொழிகள்" என்பவை இம்மாதிரி வந்த ஸ்மிருதிகளுக்கு முன்னமே, எவைகள் ஸ்மிருதிகளுக்குத் தாயாகவிருந்து வழக்கங்கள் என்று பெயர் பெற்றனவோ அவைகளிலிருந்து, உண்டானவைகள். **பழமொழி** என்றால் பழயகாலத்துச்சொல்; அந்தச்சொல்லை தத்காலத்தில் நாம் வெகு அருத்தத்துடன் பிரயோகப்படுத்துகிறோம். ஒரு நாழிகை செய்யவேண்டிய ஸம்பாஷணையை ஒரு நொடியில் சிறு பழமொழி ஒன்றைச்சொல்லி ஸரியாய்க் காட்டிவிடுகிறோம்.

மேலும் ஜனங்களுடைய அந்தர்கதமான பாவங்களை ஒருவனறிய விரும்பினால் அவர்களுடைய பழமொழிகளை நன்றாய்க் கற்றறியவேண்டும். பழமொழிகள்தான் அவர்களுடைய சரித்திரம், மதம் முதலிய ரஹஸ்யசங்கதிகளை ஒருவாறு பயிரங்கப்படுத்துகிறவைகள். இவைகள்தான், எந்த பாஷையை அவைகள் அனுசரித்திருக்கின்றனவோ, அந்த பாஷையின் யதார்த்த ரூபத்தை வெளிப்படுத்தும் ஆதாரங்கள். சரித்திர கிருந்தகர்த்தாக்கள் பல ஜனங்களுடைய பழமொழிகளை ஒன்றுசேர்த்து ஒப்பிட்டுப் பார்த்தால் ஆசியா கண்டத்தின் மத்தியபாகத்திலிருந்து ஜனங்கள் பிரிந்துபோய் உத்திரதக்ஷிண பூர்வபச்சிம பாகங்களில் குடி ஏறினகாலமும், அக்காலங்களில் அந்தசமயத்தி லடைந்திருந்த நாகரீகம் முதலியவைகளும் ஒருவாறு ஒப்பிட ஆதாரங்களுண்டாகின்றன என்ற அபிப்பிராயங்கொண்டிருக்கிறார்கள். இது யதார்த்தமே.

கர்னாடக பாத்திரங்கள், கர்னாடக கட்டிடங்கள், கர்னாடகசம்பிரதாயங்கள் என்ற அசிலாக்யத்தை யடைந்தவைகள் இப்போது மடிந்துபோகிற மாதிரி நமது தேசத்து பழமொழிகளும் அவைகளின் அருமை தெரியாத நாகரீகங்கள் என்னும் வலையில் சிக்கி மடிந்துகொண்டு வருகின்றன. ஆகையால் இவைகளை ஒரு கிரந்தத்தில் ஒன்றுசேர்த்து ஜனங்கள் இவைகளை மறவாமலிருக்கும்படி பயிரங்கப்படுத்துவது அவசியமாகவிருக்கிறது.

இவ்வளவு பாவகருப்பமாயிருக்கும் பழமொழிகள் எப்பொழுது உண்டானது; யாராலியற்றப்பட்டது என்று கேட்டால் சொல்லத்தெரியாது. அவ்விதக் கேள்விகளுக்கு விடை ஒன்றேதான். ஜனங்கள்தான் பழமொழியை உண்டாக்கினார்கள்; அவர்களின் சொத்துத்தான் அது; எல்லாருடைய ஸமுதாயச் சொத்தாகவுமிருக்கிறது. இந்த சஞ்சிகை தொடங்கி நமது ஸாவகாசமும், நமது பத்திரிகையும் இடங்கொடுக்கு மட்டும் நாம் பிரதி சஞ்சிகையிலும் இந்த 'எல்லா ஜனங்களுடைய சமுதாய சொத்தான' பழமொழியைப்பற்றி எழுத முயன்று வருவோம். பழமொழியி லவ்வளவு பிரயத்தனம் என் என்று கேட்டால், பழமொழிதான் ஒவ்வொரு ஜனங்களுடைய ஸரியான பேச்சு, புத்தி, யுக்தி, சக்தி, மதம், தைரியம், கோட்பாடு, கொள்கை முதலியவைகளை வெளியிடுபவைகள். இவ்வளவு சக்தியுள்ள இந்த பழமொழியோ இன்னாரிடந்தானிருக்கின்றது; இன்ன புஸ்தகமூலமாய்த்தான் கற்றுக்கொள்ளவேண்டும் என்பதில்லாமல் எல்லாரிடமும் கொஞ்சங்கொஞ்சம், அவர்கள் பதவியோ, வித்தையோ இவைகளை யனுஸரித்து விளங்கிவருகிறது.

"முற்றுங் கற்றவரில்லை முழுவதூஉம் கற்றோ மென்று களியற்க" என்னும் சித்தாந்தம் ஒருக்கால் இந்த பழமொழி வித்தைக்குத்தான் முக்கியமாக ஏற்பட்டதோ என்று சந்தேகிக்கும்படியாக, பெரிய வித்வான்கூட அவன்வீட்டு தயிர்க்காரியிடம் பேச்சிலறிந்துகொண்ட பழமொழிகளிருக்கின்றன. ஆகையால் பழமொழிகளை முற்றிலும் கற்றவர்கள் ஒருவருமில்லை. நமக்கு 4-தெரிந்திருக்கலாம், நமது வீட்டு மாட்டுக்காரனுக்கும் நமக்குத் தெரியாத பழமொழி

[...]தெரிந்திருக்கலாம்; இவைகளையெல்லாம், எந்த சமயத்தில் யார் யார் வாயிலிருந்து வருமோ [...]தப்போது எடுத்து நாம் ஏற்படுத்திய அட்டவணையைக் கொண்டு பார்த்தால் நமது தமிழில் சற்றேக்குறைய 10,000 பழமொழிகளுக்குக் குறைவில்லாமல் இருக்கலாம் என்று தோன்றுகிறது. சிலர் [...]வை முதலிய கவிகளுடைய "தந்தைதாய்ப்பேண்" "இளமையிற்கல்" என்னும் மூதுரைகளையும் பழமொழியாய்ச் சேர்த்து கணக்கை அதிகரிக்கிறார்கள். [...]வைகள் பழமொழிகளாகமாட்டா. ஏனெனில் இ[...]ன்றவைகள் ஜனங்கள் பேச்சாகவிராமல் [...]வியினுடைய சொல்லாகவிருக்கிறது; நாம் நம பழமொழிகளில் ஜனங்கள் சொல்லாய் வழங்கி[...]கிறவைகளை யல்லாது மற்றவைகளைப் பழமொழி[...]ாக ஒப்புக்கொள்ளவில்லை. பழமொழிகளின் அருத்தத்தை உள்ளது உள்ளபடி சொல்லி அவைகளைச் [...]ர்ந்த கதைகள், பிரயோகங்களின் வித்யாஸம் முதலியவைகள் ஏதேனுமிருப்பினும் அவைகளையும் எடுத்துச்சொல்ல வேண்டுமென்பது நமது கருத்து.

அன்றியும் இவ்வித பழமொழிகள் பதினாயிரத்தை[...]ம், அகாமுதல வௌகாரம்வரையும் எழுத்துவாரி[...]ாய்க் கொடுப்பதினால் அதிக பிரயோஜனமிருக்கமாட்டாது என்று எண்ணி ஒவ்வொரு விஷயத்தின் கீழும் வரும் பழமொழிகளை எடுத்தெழுத உத்தேசித்திருக்கிறோம். அகரத்தில் **அகதி, ஏழமை** இவைகளைப்பற்றிய பழமொழிகள் முதல் முதல் ஆரம்பிக்கிறபடியால் இவைகளை முதலில் எடுத்துச் சொல்லுகின்றோம். அகரமுதலாய்வரும் அட்டவணையில் "அகங்கையிற்போட்டு புறங்கையை நக்கலாமா" என்னும் பழமொழியைக்கொண்டு எல்லா புஸ்தகங்களும் ஆரம்பிக்கிறபடியால் அதையும் விடாமல் முதலில் சொடுத்திருக்கிறோம். அப்புறம் **ஏழமை** என்னும் விஷயத்தின் கீழ்வரும் பழமொழிகளை ஒருவாறு சொல்லி முடித்து பிறகு விஷயங்களின் பிரகாரம், விவசாயம், கோபம், வியாபாரம், பொறுமை, பணம், நாகரீகம், மதம் முதலிய ஒவ்வொரு விஷயத்தையும் எடுத்துக்கொண்டு அததன்கீழ்வரும் பழமொழிகளை நம்மால்கூடியமட்டும் சம்பூர்ணமாக எழுத முயலுவோம்.

## பழமொழிகள்.

(1) **அகங்கையிற் போட்டு புறங்கையை நக்கலாமா.**

அகங்கை என்றால் உள்ளங்கை. உள்ளங்கையில் ஏதோ ஒரு திரவபதார்த்தை—நெய்யை அல்லது [...]—போட்டு—வைத்து, புறங்கையை—வெளிப்பக்கத்துச் கையை, நக்கினால், உள்ளங்கையில் போட்ட தேனோ நெய்யோ எப்படி வாயில் வரும் என்றபடி. இந்தப் பழமொழி எப்போது உபயோகப்படுத்தப்படுகிறது என்றால், நாம் ஒருவனுக்கு உபகாரஞ்செய்துவிட்டு உபகாரஞ்செய்யாத மற்றொருவனிடமிருந்து நாம் கஷ்டப்படுங் காலத்தில் ஏதாவது ஒரு வித சகாயத்தை எதிர் பார்க்கும்போது அல்லது ஒரு விதமாக பிரயத்தனம் பண்ணி மற்றொரு விதமாக லாபம் எதிர் பார்க்கும்போது.

## ஏழமை.

(2) **அக்திக்கு ஆகாயந்துணை.**

(3) **அகதிக்குதெய்வமேதுணை.**

அகதி என்றால் = போக்கற்றவன். அதாவது அத்தியந்த தரித்திரன். அவன் பங்கில் யாரிருப்பார்கள்? ஒருவருமிருக்கமாட்டார்கள்; ஆகாசம் அல்லது தெய்வந்தான் அவனுக்குத் துணை.

ஏழைகளுக்கு தெய்வத்தைத் தவிர வேறொரு வித சகாயமும் கிடையாது என்றபடி. இந்த உலகம் எப்போதும் பணத்தையே அநுசரித்ததாக விருக்கிறபடியால் எவனிடம் பணமிருக்குமோ அவனைத்தான் தொடரும். "ஸர்வே குணா: காஞ்சனம்* ஆச்ரயந்தே" என்றும், எல்[...] குணங்களும் பணமிருக்கிறவனுக்குத்தான், அவனிடம் என்னதோஷமிருந்தாலுமதை மறைத்து குணமாக லோகம் புகழும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அகதிக்கோ ஒருவித துணையும் கிடையாது. ஆகாசமும் தெய்வமுந்தான். மற்றவர்கள் செய்த குற்றங்கள் அகதி தலையில் விடியும். அப்படி வருகிறகாலத்தில் அகதி பங்கில் யாரிருந்து சாட்சி சொல்லுவார்கள். ஒருவரும் அவனை ஒப்புக்கொள்ளமாட்டார்கள். ஆகாசமும் தெய்வமுந்தான் அவனுக்குத் துணை என்றபடி.

(4) **அகதிசொல் அம்பலமேறாது.**

அகதி ஏதாவது தான் ஒருவிஷயத்தைப்பற்றிச் [...]ன்னால் அதை யார் காதுகொடுத்துக் கேட்பா[...] ஏழமை என்பது 6-வது பாதகத்திற்கு ஒப்பா[...]கையால் அவனை ஒருவரும் ஒப்புக்கொள்ளமாட்ட[...]கள். அம்பலம் என்றால் சபை. அவன் சொல்லை சாதாரண ஜனங்களே—அவன் பெண்சாதி, பிள்ளைகளே கேட்கமாட்டார்களே: அது ராஜசபையில் என்னமாக ஏறும் என்றபடி.

(5) **அகதி தலையில் பொழுது விடிந்தது.**

இதனுடைய அருத்தம் வெகு விசித்திரம். விவரிக்கும் முன்னதாக நாம் சொல்லவேண்டி[...]

* காஞ்சனம் = தங்கம் = தங்கத்தை.
ஆச்ரயந்தே = தொடருகின்றன.

கள் சிலவுண்டு. காலையில் நாம் படுக்கையைவிட்டு எழுந்திருக்கும்பொழுது எந்த முகத்தைப் பார்க்கிறோமோ அதற்குத் தகுந்தபடி அந்த நாள் நமக்கு இருக்கும் என்பது ஹிந்துக்களின் கொள்கை. சிலஜனங்கள் நல்லவர்கள் என்றும் அவர்கள் முகத்தில் விழித்தால் ஒன்றும் குறைவுவராது என்றும் சொல்வதையும், அதே மாதிரி சிலர் பொல்லாதவர்கள் என்றும் அவர்கள் முகத்தைப் பார்த்தால் அன்றையப்பொழுது நல்லபொழுதாகப் போகவேண்டுமேயென்ற பயம் ஜனங்களுக்கு உண்டாவதையும் நாம் கேட்டும் பார்த்துமிருக்கக்கூடும். "இன்றைய தினத்தில் யார் முகத்தில் விழித்தேனோ தெரியவில்லை: என் கதி இப்படியாக முடிந்தது" என்று சிலர் புலம்புவதையும் நாம் கண்டிருக்கலாம். இதற்காகவே சிலர் தூங்கப்போகும் முன்னம் தங்கள் தலைக்கு நேராக நல்ல படங்கள் கண்ணாடி முதலியவைகளை வைத்திருப்பதுண்டு. காலையில் அவைகளின் பக்கம் திரும்பிக்கொண்டு கண்ணைவிழித்துக் கொள்வார்கள். மலையாளதேசத்தில் இம்மாதிரி பிராதக்காலத்தில் நல்ல வஸ்துக்களைப்பார்க்கவேண்டும் என்ற கொள்கையானது வெகு பிரபலமாய் வருஷப்பிறப்பின்போது நடப்பது அந்த நாட்டில் கொஞ்சகாலம் வசித்தவர்களுக்குத் தெரியும். அவ்விடத்திய வருஷப்பிறப்பிற்கு **விஷுக்கணி** என்று பெயர். விஷு என்றால் வருஷம், வருஷத்தின் பிறப்பு. அதாவது நவீனவருஷத்தின் ஆரம்பம். **கணி** என்றால் பார்வை. ஆகவே "விஷுக்கணி" என்றால் புது வருஷத்தின் பார்வை என்று அருத்தமாகும். இந்த தினத்தில் அவ்விடத்தில் என்ன நடக்கிறது என்பதை சற்று விசாரிப்போம். வருஷப்பிறப்பிற்கு முதல்நாள் சாயந்திரம் ஒவ்வொரு வீட்டிலும், அங்கங்குள்ள முக்கியமான ஆபரணங்கள், கண்ணாடிகள், பலவகைப்பழங்கள் கொன்னை முதலிய புஷ்பங்கள் இவையெல்லாம் சேகரிக்கப்பட்டு அந்த வீட்டுப் பூஜையறையில்வைக்கப்படும். சகலவிதமான காசுகள், தங்காசு, வெள்ளிக்காசு முதலியவைகள் குவியல் குவியலாய் வைக்கப்பட்டிருக்கும்; நன்றாய் பழுத்தவும் ஒருவித கோணலும் ஊனமுமில்லாதவுமான பரங்கிக்காய் பூசனிக்காய் முதலிய காய்வர்க்கங்களும் அவ்விடம்கொண்டுவரப்படும்; நன்றாய் முத்தின தேங்காய்கள் 2-மூடிகளாக குறைவு ஒன்றுமில்லாமலுடைக்கப்பட்டு வைக்கப்பட்டிருக்கும்; அகப்படக்கூடிய சகல கனிவர்க்கங்களும் நிறைந்திருக்கும். அந்தந்த [illegible]பத்துக்குத் தலைவனான **காரணவன்** என்பவன் [illegible]டிப்பிறப்பாகிய விஷுவன்றையதினம் அதி[illegible]யில் 4-மணிக்கு எழுந்திருந்து பூஜையறையை திறந்து கையில் தீபம் ஏந்தி அவ்விடம் வைக்க[illegible]டிருக்கிற பணம், காசு நகை முதலிய எல்லாவ[illegible]யும் தீபாராதனைசெய்து வணங்குவான். அ[illegible] அந்த வீட்டிலுள்ள ஒவ்வொரு ஜனங்களும் [illegible]பின் ஒருவராக தங்கள் கண்ணை மூடிக்கொண்டு அறைக்குட்சென்று கண்ணைத்திறந்து காசுக்குவிய[illegible]கள், கனிவர்க்கங்கள் முதலியவைகளை முதல் மு[illegible]லில் பார்ப்பார்கள். அப்படி முதல் முதலில் க[illegible]ணைவிழித்தபிறகு **காரணவன்** ஒவ்வொருவருக்கு[illegible] **கைநட்டு** என்று சில வெகுமதிகள் கொடுப்பது [illegible]க்கம். கைநட்டென்றால் கையில் வைக்குத[illegible]

இம்மாதிரி முதல் முதலில் நல்ல பதார்த்தங்[illegible] கண்ணைவிழித்துவிட்டு ஒவ்வொருவரும் தங்கள் [illegible] கரங்களையும் நீட்டுவார்கள். அப்படி நீட்டும்பொழு காரணவன் ஒவ்வொருவருக்கும் காசு, பழம், ந[illegible] முதலியவைகளை அவரவர்கள் வயதுக்கும் பதவி[illegible]கும் தக்கப்படி கொடுப்பதுவழக்கம். இதற்குத்[illegible] கைநட்டென்று பேர். இதற்குப் பிறகு விஷு-[illegible]றையதினம் மலையாளிகள் காலையில் கஞ்சி குடி[illegible]விட்டு பகல் 20-22 நாழிகைக்கு ஒரு வேளைத[illegible] சாப்பிடுவது வழக்கம். இதன் அருத்தம் வருஷ[illegible]பிறப்பன்று ஒரு வேளைக்கஞ்சியும் மற்றொரு வேளை அன்னமும் கிடைத்தால் இவ்விரண்டிற்கும் வருஷ[illegible] முடிய குறைவிருக்காது என்பதாம்.

முதல் முதலில் காலையில் எழுந்தவுடன் யார்முகத்தில் விழிக்கிறோமோ அதை அனுஸரித்து நமது நாளின் அதிர்ஷ்டங்களிருக்கும் என்பது ஹிந்துக்களுடைய தொன்று தொட்டுவரும் கொள்கைகளிலொன்று. இந்தக் கொள்கை முதல் முதல் காலையில் விழிக்கும் முகத்திற்கு மாத்திரமல்ல. ஏதாவது ஒரு பிரயாணம் முதலியவைகள் செய்ய எத்தனிக்கும் போதும் சுபசகுனங்கள் அபசகுனங்கள் என்று பார்ப்பதும் வழக்கம். ஒரு ஊருக்கு ஒருவன் புறப்படும்போது நல்ல சகுனமாகாவிட்டால் பிரயாணத்தை நிறுத்திவிடுவான். அல்லது வீட்டிற்குத் திரும்பி வந்து உட்கார்ந்து ஒரு வாய் தீர்த்தமாவது குடித்துவிட்டு மறுபடி புதிதாகப் புறப்படுவதுபோல புற[illegible]படுவான். சில அபசகுனங்களுக்கு பிராயச்சித்த[illegible] அல்லது மாற்றுகள் உண்டு. இரவில் புறப்படும்போது ஆகாசத்திலிருந்து நக்ஷத்திரங்கள் உதிர்ந்தால் அது அபசகுனம். அப்படி உதிருங்கால் பச்சைமரத்தைப் பார்த்தால் அந்தப் பாபம் நீங்கும். நக்ஷத்திரங்கள் உதிர்கின்ற ஸங்கதி நூதன சாஸ்திரப்படி மேகங்கள் மோதி அவைகளினின்று உற்பவிக்கும் மேகத்தீ என்று ஏற்பட்டபோதிலும் ஹிந்துக்களின்

...ள்ளைப்படி அவைகள் ஆகாசத்தில் புண்ணியம் ...ணி வசித்த மகாத்மாக்கள் புண்ணியம் குன்றிப் ...ாகவே நட்சத்திர ரூபமாக பூமியில் விழுகிறார் ...என்பதாம். இது கேவலம் குழந்தைகள் கொள் ...யல்ல: **மிருச்சகடி** என்னும் பழய நாடகத்தில் 4-...் அங்கத்தில் தாளம் போடுவதில் ஜாலர் மேலிரு... கீழவிழும்பொழுது அதை புண்ணியம் குன்றி ...ாசத்திலிருந்து பூமியிலிறங்கும் நக்ஷத்திரத்திற்கு ...ானமாயிருப்பதாக கவி வருணித்திருக்கிறார். இந்த ...ந்தமோ 2,000-வருஷங்களுக்கு முன்னியற்றப்பட் ...கிரந்தம். இம்மாதிரி சில சகுனங்களும் அவை ...நக்கு பரியாயங்களும் ஏற்பட்டிருக்கின்றன.

...நமது நாட்டார் கொள்கையைப்பற்றி இவ்வளவு ...ஞ்சொல்லிவிட்டு நமது 5-வது பழமொழியாகிய ...அகதிதலையில் பொழுதுவிடிந்தது" என்பதைப்பற் ...விசாரிப்போம். அகதி எப்பொழுதும் ஒருவருக்கும் ...லவனல்ல என்பது எல்லாரும் அறிந்திருக்கும் ...யம். அவன் சொந்த ஜனங்கள், பந்துக்கள், ...திரர்கள், அவன் பெண்டு பிள்ளைகள் கூட அவன் ...தியாய்விடவே அவனை அலட்சியம் செய்து ...டுவார்கள். அன்றியும் ஏதாவது நமக்கு ஒரு ஆபத்து ...ஸம்பவித்தால் நாம் அந்த விடியாமுசமுள்ள* தரித் ...திரன் முகத்தில் விழித்தேன் இன்றைப்பொழுது இப்படியாயிற்று என்று சொல்லுவதும் வழக்கம். இந்தக் கொள்கையினுடைய கதை பின்வருமாறு:—

ஒரு ஊரில் ஒரு அரசன் அதிகாலையில் எழுந்திருந்து தன் மாளிகைமேல் நின்றுகொண்டு இன்னும் துயில் நீங்காதிருக்கும் தனது பட்டணத்தை நாலு பக்கமும் மேலிருந்த வண்ணம் பார்த்தான். எங்கும் நிசப்தமாயிருந்தது. மனிதப்பூண்டு என்பது ஒன்று கூட காணோம். இப்படி பார்த்துக்கொண்டிருக்கும் போது ஒரே ஒரு அகதி ஒரு பழக்கடை முன் நின்றுகொண்டு கீழே விழுந்திருக்கும் பழத்தோல்களை எடுத்துக்கொண்டிருக்கக் கண்டான். தற்செயலாய் அந்த அகதியும் அரசனைப் பார்த்தான். பிறகு அரசன் தனது மொட்டை மாளிகையைவிட்டு அறைக் குட்புகும் பொழுது கதவு நிலை அவன் தலையிற்றாக்கி ரத்தகாயம் பண்ணிவிட்டது. அவன் மனதில் உடனே தோன்றிய தென்னவெனில், அந்தப் பாவிப் பிச்சைக்காரன் முகத்தில் விழித்தோம்: தலையில் காயம் பட்டுவிட்டது. அவன் சண்டாளன். இன்னும் எத்தனை பெயர்கள் பிரதிதினமவன் முகத்தைப்பார்த்து இப்படி என் மாதிரி அவஸ்தைப்படுகிறார்களோ தெரியவில்லை.—என்று யோசித்து உடனே ஒரு ஆளையனுப்பி அந்த அகதியைத் தருவித்து அவனைப்பார்த்து "அடே சண்டாளா இன்றுகாலை எழுந்து நான் உன் முகத்தைப்பார்த்தேன். **எனக்கு இன்றைப்பொழுது உன் தலையில் விடிந்தது.** என் ஸ்திதி என்னமாயிற்றுப் பார். தலையில் காயப்பட்டு அவஸ்தைப்படுகிறேன். இம்மாதிரி எத்தனை பேர் அவஸ்தைப்படுகிறார்களோ தெரியவில்லை. இவ்வளவு கெட்டவனாகிய நீ இருப்பதிலும் இறப்பது நலம். உன்னைக் கழுவேற்ற உத்தரவிடுகிறேன்" என்றான். இதைக்கேட்டான் அகதி. என்செய்வான் அவன். அகதி சொல்லோ அம்பலமேறாது. அகதிக்கோ ஒருவரும் துணையில்லை. இருக்கட்டும். நாம் நம்மால்கூடிய மட்டும் பார்ப்போம் என்று எண்ணிக்கொண்டு அரசனை நோக்கி "மகாராஜாவே என்னைப்பார்த்துத் தங்களுக்கு ரத்தகாயப்பட்டது என்றுசொல்லி என்னைக் கழுவிலேற்ற ஆக்ஞாபித்தீர்கள். நானோ இன்றைய தினம் தங்களைப்பார்த்து கழுவிலேற்றப்படப்போகிறேன். நம்முள் யார் ஜன்மம் அதிக கெட்டஜன்மம் என்பதை எல்லாந்தெரிந்த தாங்களே ஊகித்துக்கொள்ளவேண்டும்" என்றான். அரசன் அவன் தைரியத்தையும் யுக்தியையும் கண்டு மெச்சி அவனை மன்னித்தான்.

இந்தப் பழமொழியின் தாத்பரியம் அகதி எல்லாரையும்விட பணத்திலும் செல்வாக்கு முதலியவைகளிலும் இளைத்தவனாகையால், அவன் தலையில் குற்றங்களை சுமத்துவது வழக்கம். அப்படிச் செய்வது நியாயமல்ல. தீரவிசாரித்து அகதி ஒருவன் குற்றவாளிதான் என்று நிச்சயப்பட்டபிறகு அவனுக்கு சிட்சை விதிக்கவேண்டும். அப்படியில்லாமல் அவன் அகதியாயிருக்கும் ஒரு காரணத்தைக்கொண்டே அவன்மேல் எல்லாவித பாபத்தையும் சுமத்தி பழியை அவன்மேல்போட்டு அவதூறு சொல்வது நியாயமன்று என்றபடி.

**சிவசிதம்பரம்.**

---

## மீதூண்விரும்பேல்.

(339-வது பக்கத்தொடர்ச்சி.)

(339-வது பக்கத்தொடர்ச்சி.)

மெய்ம்மறதியான தூக்கம் மேலிட்டமையால் பெரியமனிதன் இராத்திரி படுத்ததையும் காலைப்பொழுது புலர்ந்ததையுந்தானறிவான். பொழுதுவிடிந்ததும் வைத்தியர் உள்ளேவந்து அதிக மரியாதை வணக்கத்துடன் உடம்பு என்னமாயிருக்கிறது? என்று

---

* இது வழக்கச்சொல்லில் 'விடியாமூஞ்சி' என்று மருவி வருவதுண்டு.

கேட்டார். பெரிய மனிதன் இராத்திரி படுத்துக் கொள்ளும்போது அதிக எரிச்சல் கொண்டவனாக இருந்தும் மெய்ம்மறந்து உறங்கினதினாலும் வைத்தியர் பேசும் சாந்தமான குரலினாலும் சற்றுக் கோபம் தணிந்து நிதானமாகவே மறுமொழி கூறினான். ஆனாலும் உபசாரம் மாத்திரம் போதாதென்று வெறுத்துக்கொண்டான்.

அதன்மேல் வைத்தியர்: ஐயா! நான் நடத்துமாறு நடக்க முன்னமே ஏற்பாடுசெய்து கொண்டிருக்கிறீரன்றோ? என் கருத்தெல்லாங்கூடித் தாங்கள் எப்படியாகிலும் சுகப்பட்டவேண்டும் என்பது தானே: நான் இப்படியெல்லாம் நடத்துவதற்குக் காரணங்கள் இன்னின்னவென ஒவ்வொன்றும் உமக்குத் தோன்றுது. இவைகட்கெல்லாம் அதிநுட்பமான சாஸ்திரப்பிரமாணங்களும் அநுபோகமும் ஆதாரமாயிருக்கின்றன. ஆனாலும் இதுவிஷயத்தில் ஒரு சங்கதி உங்களுக்கு நான் சொல்லவேணும்; அதென்னவெனின் படுக்கும் பாய்களைக்கூட வைத்தியத்திற்கு அடுத்தவைகளாகும் வித்தையைக் கண்டுபிடித்திருக்கிறேன். இதுமெய்தான் என்று ஒப்புக்கொள்வீர். எங்ஙனமெனின், இராத்திரி தாங்கள் மெய்ம்மறந்து உறங்கியதே அதற்குச்சான்று. இந்த வித்தையைப் பஞ்சுமெத்தையிலும் பட்டிலும் ஏற்ற முடியாது. ஆனபடியினாலேதான், எனக்குச் சிறிதும் மனமில்லாவிட்டாலும் தங்களுக்கு இப்படிப்பட்ட சொல்ப உபசரணை நடந்தது. நல்லது, பொழுதாயிற்று; தயவுசெய்து எழுந்திருக்கலாம் என்று சொல்லி, இராமோசினி வேலையாட்களை அழைத்தனர். இதற்குள் பெரியமனிதன் எழுந்து உடைகளைச் சரியாக உடுத்திக்கொண்டான். காலையில் பலகாரமாவது திருப்தியாகப் பண்ணலாம் என்று நினைத்திருந்தான். ஆனாலும் ஒரு அப்பமும் சிறிது கோதுமைக்கஞ்சியும் தவிர வேறொன்றும் கிட்டவில்லை. வைத்தியர் சாஸ்திரப்பிரமாணங்களைச் சாங்கோபாங்கமாய் எடுத்துச் சொல்லி நோயாளிக்குத் திருப்திவரப்பண்ணினார்.

சிற்றுண்டி கொண்ட சிறிது நேரத்திற்கெல்லாம் பெரியமனிதனைப்பார்த்து வைத்தியர்: ஐயா! வாரும்: இனி உங்களுக்குக் கைகால்கள் இலகுவாயியங்கும்படி சிகிச்சை செய்யவேண்டும் என்று சொல்லி, அவனை ஓரிடுக்கறையில் கொண்டுபோய் எழுந்து நில்லுங்கள் என்று சொன்னார். அப்பப்பா! அது முடியாது: மூன்று வருஷமாய் எழுந்து நிற்பதை இன்னதென அறியேன் என்று பெரியமனிதன் சொன்னான். பிறகு வைத்தியர் அப்படியானால் அக்குளில் கட்கதண்டங்களை வைத்துக்கொண்டு சுவரின்மேல் சார்ந்து கொள்ளுங்கள் என்றார். பெரியமனி அப்படியே செய்தான். வைத்தியர் திடீரென் வெளியே போய் கதவைப பூட்டிக்கொண்டார். படியிருந்த கொஞ்ச நேரத்திற்கெல்லாம், அ பாபம்! இருப்புத் தகடுகளினாலானதென்று முன் கண்டறியாத தரையானது, பொறுக்கமுடியாத வாகச் சுடுவதாய்த் தோன்றிற்று; அவன் வைத் ரையும் அவர் ஆட்களையும் கூவிக்கூவி யழைத் பார்த்தான்: எவரும் கிட்டப்போனவர்களல்ல. பி உரத்துக் கூவவும் பயமுறுத்தவும் பார்த்தான்: ஒ றுங்காரியமில்லை. ஓலமிட்டுப் புலம்பினான்: ஆ யிட்டான்: வாக்கிட்டான்; வருந்திவேண்டிக்கொ டான். ஆனாலும் ஒருவன்கூட அவனுக்குக் கைலா தானுங் கொடுக்கவரவில்லை. கணந்தோறும் சூடுமா திரம் அதிகரித்துக்கொண்டேவந்தது. ஐயோ பாப என்னசெய்வான்! வேறு விதியின்றி ஒரு காலி மேல் பலத்தைத்தாக்கி மற்றொரு காலைத் தூக்கி கொண்டான். அவ்வளவு சீக்கிரமாய்க் காலைத் த முடியாதென்று நினைத்திருந்த அவனுக்கு அப் தூக்கியது அதிசயமாகவே தோன்றிற்று. மறுகா மாற்றிக்கொண்டான்: இப்படியாக அவன் தா வேண்டாமலே கால் மாறிக் குதித்துக் கூத்தாடவே ஒவ்வோரெலும்பும் நரம்பும் அசைவுற்று வேசாறி வியர்வைவிட்டான். இப்படி அவன் உடலில் வியர்வை கசிந்து எத்தனையோ வருடகாலம் ஆகியிருக்கும்.

வைத்தியர் இவ்வளவில் திருப்தியடைந்து இளைப்பாற்றும்பொருட்டு உள்ளே ஒரு சாய்வுநாற்காலியையனுப்பினார். சூடுண்டதரையை முன்போலப் படித்தரமாய்க் குளிரச்செய்தார். பின்பு பெரியமனிதனும் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். அப்போதுதான் அப்பிணியாளனுக்கு, இளைப்பாறுதலால் உண்டாகும் பயனும் சுகமும் தோன்றின. இந்தத் தேகவுழைப்பால் பெற்றானல்லவா. அஃதில்லாவிடின் இளைப்பாறுதலால் இன்பந் தோன்றுவதில்லையே.

பகல் சாப்பாட்டு வேளைக்கு வைத்தியர் அவனெதிரில் வந்து அவனைத் தம்மிஷ்டப்படி வருத்தியதற்காக மன்னிக்கும்படி பலவிதமாய் வணக்கத்துடன் கேட்டுக்கொண்டார். ஆனாலும் அவனுக்கு முகம் கொஞ்சம் கோணலாய்த்தானிருந்தது. பின்பு அவனெதிரில் அமுது படைக்கப்பட்டு கோழிக்கறிவறையல் முதலியவற்றின் வாசனை கமகம வென்று வரவே அவன் கோபம் சற்றுத் தணிந்து சிறிது முகமலர்ச்சியும் உண்டாயிற்று. "நிழலருமை வெயிலிலே சென்றறிக" என்பதுபோலத் தேக முயற்சியாலும், இரண்டொரு நாளாய் வாயைக் கட்டிவைத்த

[...]மையாலும், அவனுக்குச் சாப்பாட்டில் முன்னெப்[...]ழ்தும் தோன்றாத சுவை இப்பொழுது தட்டிற்று. [வை]த்தியரும் தண்ணீரோடு சிறிது சாராயம் கலந்து [கு]டிக்கும்படி அநுமதி கொடுத்தார். இந்த நிர்ப்பந்த [மெ]ல்லாம் இவனுக்கு ஒன்றும் சரிப்படவில்லை. அந்த [மூ]ந் மாதமும் ஒரு வருஷகாலம் போலக்கழிந்தது. [அ]ந்த மாதம் அப்படிக் கழிந்துதொலைந்ததும் அவனு[டை]ய ஆட்கள் முன்னர்த் தாம் உத்தரவு பெற்றிருந்த[ப]டி வந்து இனிச் செய்யவேண்டியது என்ன என்[றா]ர்கள். அவர்கள் வந்ததும் வராததுமாயிருக்கை[யி]ற்றனே, அவன் "நல்லவனுக்கடையாளம் சொல்[லா]மற் போய்விடுதல்" என்பது போல, வைத்தியரா[ன]ல்லது அவர் வீட்டவரா எவரிடத்திலும் செலவு பெற்றுக் கொள்ளாமலே சட்டபட்டென்று வண்டியேறிக்கொண்டு ஓட்டம்பிடித்தான். இப்படிக்கெல்லாம் பலாத்காரமாய்த் தேக உழைப்பை வாங்கி, வா[யை] வயிற்றைக் கட்டி வெறுப்புறும்படியாகப் பல[வி]தத்தில் ஹிம்சைபடுத்தினது என்னென்று சாவதா[ன]மாய் யோசித்துப் பார்க்கையில், ஈதெல்லாம் முன்[னை]ய வைத்தியர் செய்த தந்திர உபாயமென்று தெளி[ந்]து, அவரை அதற்காகச் சாடும்படி கோபாவேசத்தோடு அவர் வீட்டிற்கு நேராய் வண்டியை விட்டுக்கொண்டுபோய் நிறுத்தினன்.

வண்டியை விட்டிறங்கி உள்ளே போனன். அந்த வேளை வைத்தியரும் வீட்டிலிருந்தார். தொப்பையுந் தொந்தியுமாய் செக்குப்போலக் கொழுத்துப் பருத்திருந்த அந்தப் பெரியமனிதன் நிறமாறி உருமாறி, இளைத்துப் பாதியாய், கட்கதண்டங்களுமின்றி வரவே, அவனைப் பார்த்துச் சிறிது நாளாயிருந்தும், வைத்தியருக்கு அவனுடைய அடையாளம் தெரியவேயில்லை. அவன் கோபாவேசத்தில் பிதற்றவேண்டினவற்றையெல்லாம் பிதற்றியாயினபின்பு வைத்தியர் அவனை இன்னானென நிதானித்துக்கொண்டு அவனைச் சாந்தமாய்ப் பார்த்து 'ஐயா! ஸ்ரீ இராமோசினி பண்டிதசிரோன்மணியாரிடம் போய் வைத்தியம் செய்துகொள்ளும்படி நான் பலாத்காரம் பண்ணினதுண்டா? என்னையேன் இப்படிவாய்க்கு வந்தபடிக்கெல்லாம் பேசுகின்றீர்?" என்றார்.

பெரியமனிதன், மெய்தான், ஐயா! அவர் மஹா நிபுணர் சத்தியசந்தர் அப்படி யிப்படி யென்று அவரைச் சும்மா புகழ்ந்துகொண்டீரே என்றான்.

வைத்தியர் நான் சொன்னதில் பிசகென்ன? உங்களை என்னவாகிலும் மோசம் பண்ணினரா? அவரிடத்தில் வைத்தியம் செய்துகொண்டதில் ஒன்றும் குணமில்லாமற் போயிற்ற? என்றார்.

அதன்மேல் பெரிய மனிதன்—அப்படி யென்று சொல்லமாட்டேன். வாஸ்தவமாய் முன்னிலும் எவ்வளவோ மேலாயிருக்கிறது. சாப்பாடு நன்றாய் ஜீரணமாகிறது. முன்னிலும் நன்றாய்த் தூக்கம் பிடிக்கின்றது. பசி நன்றாக எடுக்கின்றது. இப்பொழுது நன்றாய் நடக்கவும் வல்லேன் என்றான்.

பிறகு வைத்தியர் இவ்வளவு அற்புதங்களையெல்லாம் செய்த அவரைத்தானா இப்படி நொந்து கொள்ளவந்தீர்? நீங்கள் பிழைப்பீரென்று உங்களுக்கே தோன்றாத நிலைமையில் இருந்ததை மறந்துவிட்டீரோ அந்தமட்டில் போன பிராணனைக் கொடுத்தாரே! இன்னுமென்ன? என்று சொன்னார். இதையெல்லாம் முன் பின் யோசித்துப்பாராத அந்தப் பெரிய மனிதன் மனங்கலங்கி நின்றான். வைத்தியர் அடியில் வருமாறு பிரசங்கிக்கத் தொடங்கினர்:—

நீர் நொந்துகொள்ள வேண்டியதெல்லாங்கூடி என்னவென்றால், உம்மை அறியாமலே நீர் மோசம் போனீரே, அதுதான். எப்படியென்றால், தந்திரமாய் உமக்குத் தேகசுகமேற்றப்பட்டது. நீர் இராமோசினியாரிடம் சென்றதும் சம்பிரமமாய்ச் சாப்பிட்டுக்கொண்டிருந்த சில ஏழைகளைக் கண்டீரல்லவா. அப்பண்டிதர் தம்மைச் சூழ்ந்திருப்பவர்க்குத் தாயகமாயிருப்பவர்; ஏழைகளில் பெரும்பாலர் நோயிலடிப்படுதற்குக் காரணம் அன்னபானாதி சௌக்கியக் குறைவுபாட்டாலென்றே நன்றாயறிந்தவர். ஆகையால் பெருங்கருணையோடு, அவர்களை நல்ல அன்ன பானீயங்களாலே உபசரிக்கின்றார். செல்வர்களோ என்றால் மட்டுமிதமில்லாமல் கண்டதைக் கண்டபடி உண்டு முழுச்சோம்பர்களாய் நோயை விலைக்கு வாங்கிக்கொள்பவரானபடியினாலே அவர்களை வேறுவழியாய் நடத்துகின்றார். அவர்களை வாயைக் கட்டிச் சரீரப்பிரயாசை செய்து வெறுப்புறும்படி வருத்துகின்றார். இப்படிச் செய்யாவிடின் வேறு கதியில்லையென்றல்லவோ அப்படிச் செய்வது. அவர்க்கென்ன செல்வர்கள் விஷயத்தில் வஞ்சனையா? ஐயா! உங்களைக் குழந்தைபோல எண்ணித் தன்னிஷ்டப்படி செய்திருப்பார்; ஆனாலும் உங்களுடைய சொந்த நன்மைக்காகத்தானே அப்படிச் செய்தார். உங்களுக்கு நல்ல சாப்பாடும் கிடைத்திராது. நல்ல பானமும் கிட்டியிராது. நல்ல படுக்கையும் போடுவித்திரார். உங்களுடைய நடவடிக்கைகளை யெல்லாம் நல்ல வழியில் திருப்பி, உடம்பிற் உறங்கிச் சோம்பியிருந்த வலிமைக் கிளப்பும் பொருட்டே இப்படியெல்லாம் விந்தைவிந்தையாய்ச் செய்தார் என்று நன்றாய் அறியுங்கள். உங்களிஷ்டப்படி நடப்

பிக்கவில்லை யென்று சொல்வது வீண் மனோராச்சியமே ஒழிய வேறல்ல. அவரைப் பழிக்கவு மிடமுண்டோ? மற்றவர்களைப் பற்றிச் சொல்வானேன். நோயை இலகுவாக்க சாஸ்திரோக்தமாய் என்னென்ன செய்யலாகுமோ, அப்படியெல்லாம் செய்து பரிசோதிக்கும்படி தானே வாக்கிட்டார். அவர் சொன்னதில் பிசகுண்டா? இப்பொழுது பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கிறேனே; நீங்கள் அவரிடம் போனபோது இருந்த இருப்பென்ன; இப்பொழுதிருக்கும் இருப்பென்ன; அவர் செய்த நன்றிக்கு உங்கள் ஆஸ்திபாஸ்தியில் பாதி பகிர்ந்து கொடுத்தாலும் தீராதே. "நன்றி மறப்பது நன்றன்று," "உய்வில்லை செய்நன்றி கொன்ற மகற்கு" என்று பெரியோர் பேசியிருக்கின்றார்களே என்று இப்படியாக வைத்தியர் வற்புறுத்திச் சொன்னதை யெல்லாம் செவியுற்ற பெரியமனிதன் அறிவு கலக்கம் நீங்கித் தெளிவடைந்து நன்றி யறிந்தவனாய், தன்னை மன்னிக்கும்படி வைத்தியரை வெகுவாய்க் கேட்டுக்கொண்டு பின்பு அதிக வணக்க விநய விசுவாசத்துடன் ஒரு கடிதம் எழுதி அதையும் ஓர் பெரும் பரிசையும் ஒரு சேவகன் கையில் கொடுத்து இராமோசினி பண்டிதர் கையில் சேர்க்கும்படி யனுப்பினான். இப்படியாக அடைந்த சுகக்ஷேமத்தால் மனவமைதி கொண்டவனாய் முன்போல் முழுச்சோம்பனாயிராது நன்றாய் ஓடியாடி உழைத்து மிதமாயுண்டு நீடிய ஆயுள் பெற்று முதுமைப்பருவம் வரையில் இன்புற்று வாழ்ந்திருந்தனன்.*

தி. செல்வக்கேசவராய முதலியார், பி. ஏ.

---

## இரண்டு சகோதரர்கள்.

### XX.

இதுநிற்க மாசிலாமணியின் மனைவியாகிய மனோரஞ்சிதம் என்பவள் தகைமையும் ஒழுக்கமும் எவ்வாறிருக்கிறதென்று அதையும் கொஞ்சம் பார்ப்போம். சாதாரண ஆடையாபரணங்களாலும் பிறவியல்பாலும் இவளுக்கமைந்துள்ள அழகைப்பற்றி வருணிக்கப்புகினும் எமது அவாவிற்கு எல்லை கிடைப்பதருமையே. ஆயினும் கற்றறிந்த பெரியோரால் ஈதொரு பொருட்டாய் மதிக்கப்படாமல்

"குஞ்சியழகுங் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சளழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாமென்னு நடுவுநிலைமையாற்
கல்வியழகே யழகு"

என்று சிறப்பித்துக் கூறப்பட்டுள்ள தெதுவோ அ[illegible] கல்வி யழகே எல்லாவற்றினும் மிகுந்திருந்தது. அ[illegible]லும் இவள் சில பெண்களைப்போல் அல்லியரசாணி மாலை, திரௌபதைகுறம், தேசிங்குராசன்கதை, விக்கிரமாதித்தன்கதை முதலிய திவ்ய பிரபந்தங்களில் தொண்ணூற்றெட்டு தப்பிதங்களுடன் தடுமாறி வீழ்ந்தெழுந்து தலைமாடேறி அதோடு கல்விக்கடலை அங்கையில்வைத்து ஆசமனீயம் செய்துப்போட்டதா யெண்ணி இறுமாந்துபோனவளல்ல. எண்ணிறந்த இன்னன நூல்களை இடைவிடாமற்கற்று கல்வித் திறமையும் கவிதா சாதுரியமும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற கவிராயருக்குள்ளும் அநேகரை மதுபானம் செய்யும் மூவன்னுக்களுக்குள் முதலெண்முத்திராதானம் பெற்றவர்களாயிருக்கக் காண்கிறோம். ஆ[illegible]லின் இவ்விழிகுணம் அப்பெண்களுக்கும் அமையாமற்போகாது. இரண்டாவது தற்காலத்திய துரைத்தன பாடசாலையின் படிப்பும் பார்க்கப்போனால் அப்படி யப்படித்தானிருக்கிறது.

இந்த கலாசாலைகளில் சிறந்த படிப்பினையையும் பெருந்தகைமையையும் உண்டுபண்ணத்தக்க நீதி நூல்களை பாடபுத்தகங்களாக ஏற்படுத்தாமலிருப்பது சுதேசவித்தியாபிவிருத்திக்கு மிக்க இடையூறு விளைவிக்கத்தக்கதே. அதைப்பற்றி கேள்வியில்லை என்று பொதுஜன சமூகத்தார் பலர் குறைகூறி முறையிடுவதை நோக்குமிடத்து, காலமெல்லாம் கஷ்டப்பட்டு படித்து வித்தியா இலாகா சங்கத்தலைவரால் வித்தியாபட்டம் அளிக்கப்பெற்ற பட்டதாரிகள் படிப்பிலும் ஒரு சொத்தை யிருப்பதாக ஏற்படுகிறது. இவ்விதமிருக்க சும்மா நாய் சந்தைக்குப்போய் வருவதுபோல் நான்குநாள் பள்ளிக்கூடம்போய் அப்புறம் நானும் படித்துவிட்டேனென்று 12-வயதிற்குள்ளாகத்தானே அடுப்பூதும் தொழிலில் அமர்ந்துவிடும் நமது சிறுமிகளின் நிலைமை அந்தோ! பின்னும் எவ்வாறிருக்கவேண்டாம்.

"விளக்குவிலைகொடுத்துக் கோடல்விளக்குத்
துளகமின்றென்றனைத்துந்தூக்கி—விளக்கும்
இருள்படுவதாயின் மலைநாடவென்னைப்
பொருள்கொடுத்துங் கொள்ளாரிருள்."

கல்வி கற்றபின்பும் தூர்க்குணமும் செய்கையும் நீங்காதொழியின் அப்படி கற்ற கல்வியறிவினாலாய பயனென்னை? அதிலும் இந்த அரைக்கல்வி முக்கியமாய் பெண்களுக்கு குறங்கின் கைக்கொள்ளி கிடை

* இது 'அதிரசமஞ்சரி' யென்னும் புஸ்தகத்திலிருந்து எடுக்கப்பட்டது. இக்கதையோடு இன்னும் 6 கதைகளடங்கிய அச்சிலுபுஸ்தகம் $1\frac{1}{2}$-அணா விலைக்கு அ. ப. ஏஜன்ஸியில் கிடைக்கும். தபாற்கூலி அரையணா பிரத்தியேகமாக அனுப்பவேண்டும்.

தவாருகிறது. இதைவிட அந்தக் கல்வியறிவு இல்லாமலிருப்பதே நலம். ஆதலால் அதனினும் ஏற்றமுடையதாகிய உண்மையறிவே எவருக்கும் இன்றியமையாதது; அறியாமையாகிய இருளைப்போக்கி பெருமையுண்டாக்கவல்லது; சிற்றுயிர்க் குற்றநற்றுணை; இல்லறத்திற்கேற்ற நல்லறிவு. இந்த உண்மையறிவுபெற்று சீரும் சிறப்பும் பேரும் பெருமையுமடைய நாமறிந்தமட்டில் நமது மதானுசம்பந்தமான நூல்கள் தவிர நமக்கு வேறென்னவழியிருக்கிறது. எற்கனவே இதற்கு அனுசரணையாக மேன்மை தங்கிய ரிப்பன் பிரபு, கல்கத்தா வித்தியாசங்கத்தில் பட்டமளிக்கக்கூடிய சபையில் *உபந்நியாசம் செய்தகாலையில் "மதானுசம்பந்தமான போதனைக்கு இடந்தராத ஓர் மாதிரியான படிப்பானது அவ்வளவும் முற்றுப்பெறாததும் அரைகுறையானதுமென்பது என்னுடைய ஆழ்ந்த கொள்கைகளில் ஒன்றாயிருக்கிறது" என்று மிகவற்புறுத்திக்கூறியிருப்பதாலு முணர்க. அங்ஙனம் கற்று சத்தியம், தருமம், தீரத்துவம், பூதசயை, இன்சொல், பெரியாரைத் தொழுந்தன்மை, பக்தி முதலியன பெருமல் †மதப்பிரஷ்டராயுள்ளவர் கடிவாளமில்லாத குதிரைக்குச் சமானமாய் நெறிதவறி உலகவியற்கையை உள்ளபடி உணர்ந்து அதற்கேற்ற வண்ணம் நடவாமலும், தத்தம்வினைக்கடனைச் செய்யாது வீண்பொழுது போக்கியும் தமக்கே கெடுதியுண்டாகும் செயல்களைச்செய்தும் நாசமெய்துவர் என்பது எவரும் அறியாததன்று. திருஷ்டாந்தமாக இக்காலத்தில் வித்தியார்த்திகளென ஸன்னது பெற்று விளங்கும் படிப்பாளிகள் பலரும் போனதுபோக மதுபானம், பரதாரகமனம், லஞ்சம் முதலிய தீந்தொழில்களையாவது கட்டோடே நிவர்த்திசெய்தவர்களாயிருக்கின்றனரா என்று கிஞ்சித்து ஊக்கத்துடன் ஆராயப்புகுவோமாயின், அவர்கள் கற்றகல்வியின் வளப்பம் இத்தன்மைத்தென செவ்வே புலப்படும்.

ஆனல் மநோரஞ்சிதம் அங்ஙனமின்றி இம்மை மறுமைப்பயன்களுக் குரியனவாகிய நூல்களையே முக்கியமாய்க்கற்றுத் தேற்சியடைந்திருந்தாள். இவள் அகன்ற நெற்றியின் விசாலமே புத்தியின் வளப்பத்தையும், கயன் மீனனைய காட்சியுடைய கண்களின் தோற்றமே அயலார் படுந்துயரத்தைக் காணும்போதே மணற்கேணியினின்றூறும் ஊற்றைப்போல நீரைப்பெருக்கி குழைந்து நின்று எவரையும் அன்புறக் கடாட்சித்து ஆதரிக்க நல்ல தண்ணருட்கடலென்பதையும் ஐயந்திரிபற உணர்த்தும். எள்ளின் இளம்பூப்போல் விளங்கும் நீண்ட நாசியோ பல நூல்களையும் கற்றதனாலடைந்த உண்மையறிவின் அளவையும், கோபம் செய்வாரிடத்திலும் பொறுமையுடையவளென்பதையும் எடுத்துக்காட்டும். கலாசமுத்திரத் திடைப்படிந்து அதன் நறுந்தேறலையுண்டு களித்த கொவ்வைக்கனிபோன்ற இதழையுடைய வாயோ எந்நாளிலும் தேன்மொழி துளிர்த்து நிற்கும்; நாக்கு இன்னற மெடுத்துரைப்பதற்கன்றி மற்றதற்கு முற்றும் வலியிழந்ததெனவும், செவி பெரியோர் வாய்மொழி கேட்டலுக்கன்றி மற்றும் சலகச்சொல் பழிச்சொல் முதலிய கொடுஞ்சொற்களுக்கு வச்சிரத்தட்டெனவும் சொலற்பாலதே. இவை எல்லாப் பெருமையுடனும் நடையில் இளமையாகிய அன்னத்தை நிகர்த்த இவள் மனவொழுக்கத்திலும் (நீருடன்கலந்த பாலைப்பிரித்துண்ணும் வல்லமை பெற்ற) அதன் மேன்மைக் குணத்தையே உடைத்தாய் பாவம் புண்ணியம் என்பதைப் பகுத்துணர்ந்து நடு நிலைதவறாமல் அதைக் கடைப்பிடித்து ஒழுகாநின்றனள்.

இங்ஙனம் நல்லபடிப்பிலும் நற்குண நல்லொழுக்கத்திலும் சிறந்தவளாய், தான் பண்ணிய புண்ணியத்திற்கேற்ப தனக்கு ஏற்பட்ட உத்தமனான புருஷனே பிரத்தியட்ச தெய்வம்: அவனே பந்து, அவனே உயிர்த்தோழன்: இம்மை மறுமைப்பயன்களுக்குக் காரணகர்த்தன்: பெற்றதாய் புத்திரனைவிட எதையும் அளவின்றி கொடுக்கத்தக்கவன்: என்று அவனையும், அவனைப் பெற்றெடுத்து வளர்த்த அவன் தாயையும் சதா உள்ளத்தில் விஸ்வாசித்து, தாய்வீட்டினின்றும் கொணர்ந்த பொருளிலும் தனதென யாதொரு சுதந்தரமும் பாராட்டாமல் எல்லாம் அவர்களுடைய உடைமைகளாமென மதித்து, அவர்களுக்குத் தன்னிடத்து மிகப்பிரீதி யுண்டாகுமாறு அவர்கள் செய்யும் செய்கைகளை மெச்சித்துதித்தும், அவர்கள் குறைகூறாவண்ணம் கட்டளைப்படி நடந்து பணிவிடைகள் செய்து விநயத்துடன் உபசரித்து அண்டை அயலில் வாழும் குலஸ்திரீகளுக்கு ஓர் உதாரணமாக இல்லறத்தை நடத்திவந்தாள்.

குப்புதாய் பண்ணும் குடித்தனத்தின் வளப்பமும் சற்றேறக்குறைய சகலருக்குந் [illegible] ம். அயினும் போனதெல்லாம் போக [illegible] ற்ற பதிவிரதையாய் இருவ [illegible]

* Convocation Speech.

† "A man devoid of religion" says a latin adage "is like a horse without a bridle."

டாவதிருக்கின்றனரா என்று பார்ப்போம். முன்னமே பாகப்பிரிவினை விஷயமாய் நடந்த சிக்கு முக்கான வழக்கில் மனமோகனை திறமையற்றவனென்றும் ஆள் இளப்பத்தைபறிந்துகொண்டு அவன் புருஷனுய்ப்பிறந்துவிட்ட தோஷத்தால் குடும்பத்தில் சும்மா பேருக்கு வைத்துக்கொண்டிருந்த அரைகுறையான அற்ப ஆதிபத்தியத்தையும் தன்பேருக்கே 'மேடோவர்' பண்ணிக்கொண்டதுந் தவிர, அந்த மட்டிலாவது அவனை ஆள் மிருதியாய் விட்டுவிடாமல், அதுமுதலாக அன்றாடம் வெளியிற் சென்று உழைக்கும் உழைப்பிலும் கண்ணோட்டம் வைத்து கண்டனை தண்டனைகளுடன் வெகு கட்டுதிட்டமாய் வேலை வாங்கி வரத்தலைப்பட்டாள். அதனாலும் அவனுக்கு அவள் ஏகதேச நோட்டத்தில் எங்கே ஒட்டை வந்து விடுகிறதோ என்ற பயங்கரமேயன்றி மனக்குறை மாத்திரம் கிடையாது. இவ்வண்ணம் இருதிறத்தாரும் குடித்தனம் செய்கையிலே, மாசிலாமணி அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தங்களைப் பெறுவது தன்கடமையென்றெண்ணி எப்பவும் நல்வழியிலேயே பொருள் சம்பாதித்து, அப்பொருளை தன் குடும்ப பரிபாலனத்திற்கும் பரோபகாரமான பொது நன்மைக்கும் உபயோகப் படுத்தி வந்தான். இவனுடைய இல்லாள் அகத்திற்கு வந்ததும் இலக்குமியின் அருளும் உண்டாய் நாளுக்குநாள் பொருள்வருவாய் அதிகரித்தது. மனமோகனே, அவன்படும் பாட்டிற்குமட்டும் குறைவில்லை. குப்புசாய் பெரியம்மாளாகிய முனியம்மாள் சொல்லைக் கேட்டு அதன்படி நடக்க ஆரம்பித்த காலையிலேயே *பெரியம்மாளும் அவளுடன் அம்மனையின்கண் வந்து குடிகொளுவாளாயினள். மேலும் எக்குடும்பத்திலேனும் சர்வாதிகாரத்தையும் ஒரு ஸ்திரீயே வகிப்பாளாயின் அக் குடும்பம் நசிக்குமென்பது சாதாரணம். பொருள் வருமானம் மட்டுப்பட்டதேயல்லது மனதார ஒருவனுக்கு ஒருபைசா ஈவதேனும் கொடுப்பது துர்லபமாயினும் செலவுமட்டும் குறையவில்லை. 'ஆம்போதுமவளோடுமாது மவள்பிரிந்து போம்போதுமவளோடும்போம்' என்றபடி அவள் நீங்கினபோதே அம் மனையின் சீரும் சிறப்பும் செல்வமும் அவளைப் பின்தொடர்ந்தது. ஆயினும் ஒருவரிடம் போய் இரக்கும்படியான அவ்வளவு கேவல நிலைமைக்கு வரவில்... சுகத்திற்கில்லாமல் பொருள்

வீணாய் பாழுக்கிறைந்ததினாலேயே குடும்பம் பா செட்டது.

* * *

இவ்வண்ணம் பலநாட்கழிந்தபின்பு ஓர்நாள் மத்யானம் குப்புதாயும் அவளோடொத்த பெண்கள் சிலரும் வீட்டில் சபைகூடிப்பேசிக்கொண்டிருக்கையில் மடையத்தூருக்குச் சமீபத்திலுள்ள நெல்லிக்குப்பத்தில் யாரோ ஒருவன்வந்து குறிசொல்லி பிள்ளையில்லாதவர்க்குப் பிள்ளையும், பொருளில்லாதார்க்குப் பொருளும், காணமற்போயும் களவுபோயுமுள்ள சொத்துக்களைக் கண்டுபிடித்தும் கொடுப்பதாயும் எவ்வித நோயையும் பேயையும் பறக்கடிப்பதாயும் கேள்விப்பட்டு உடனே பிள்ளைவரத்திற்காக மடையத்தூருக்கு தன் கணவனுடன் புறப்பட்டுவிட்டாள்.

நெல்லிக்குப்பத்தில் நல்லதண்ணீர்க் குளக்கரையின்பேரில் குடிசை கட்டிக் குந்தவைத்து பலரு டும்பிடுபோட்டுக்கொண்டுவந்த அந்த மதுரைவீ பூஜாரியிடத்திற்கு அவளும் மனமோகனும், இன்னும் அவர்கள் சுற்றத்தாரும், சின்னப்பணம் காணிக்கையும் பாக்கு வெற்றிலை தேங்காயும் எடுத்துக்கொண்டு மடையத்தூரினின்றும் திருக்கோலங்கொண்டார்கள். அவன் அன்று ராத்திரி 9 மணிக்குமேல் முடிகட்டிக்கொண்டு, தப்பட்டை, சிறுபறைகள் முழங்க வெகு அட்டகாசமாய் வெள்ளை முதலி வீட்டினின்றும் புறப்பட்டு அடகு போட்டுக்கொண்டு கோவிலுக்கு வந்து, அதன்பின்பு உடுக்கைதட்டி மதுரைவீரன் பேரிலும் மற்றும் சில்லரை தேவதைகளின்பேரிலும் பாடின பாட்டையும், ஆட்டுக்கிடாவைக் கடித்துத் தூக்கிக்கொண்டு ஆடின ஆட்டத்தையும், வரிசையாய்க் கத்திகட்டி அதற்குள் நுழைந்ததையும், அங்கே கூடியிருந்த பிரஜைகள் கண்டுகேட்டதும் புளகாங்கிதத்தால் அவரவர்க்கும் குண்டி தரையில் தங்காமல் தாளம்போட்டது.

எல்லாப்பாட்டும் ஆட்டமும் அடங்கி குறிசொல்ல ஆரம்பித்து, அவன் குறிக்கு முகப்பாடமாகிய "வெட்டாரமான குச்சி, விளைந்தடிசவுக்கம், ஆதாரமான பாதைவிட்டுப்பாதை, ஒரு ஏற்பாடான முகாந்தரமாய் கைப்பொருளை நாடிவந்தவர் யார்காணும்—ஆவ்ட்டாலியா!" என்பதை வழக்கம்போல் சொல்லிமுடித்ததும், மனமோகனும் அவன் மனைவியும் எழுந்து எதிரில்வந்து கைகட்டிவாய் பொத்திக்கொண்டு

* ...ம்தேவி.

ங்க, ஒருவாறு பட்டும்படாமலும் அவர்கள் எண்ணி ந்த செய்தியை வெளியிட்டு, "இதற்கு மூன்றும் ாசத்தில் கர்ப்போற்பத்தியானல் உன்காதிலுள்ள லையைக்கொடுத்து விடுகின்ருயா" என்று குப்பு ாயைக் கேட்டான். அந்த மட்டோடே அவளை ன்ருன தெய்வமே என்று நம்பி தடைசொல்லா ் ஒத்துக்கொண்டு மறுவாரத்தில் பத்தோ பதி ந்தோ செலவழித்து பூஜையும்போட்டு அது முத ாக வாரந்தோறும் கோவில் பிரதட்சணம் செய்வ ற்காக வந்துகொண்டிருந்தார்கள்.

இவ்விதம் மனமோகனும் குப்புதாயும் வாரந்தோ ும் நடந்துகொண்டிருக்கையில் கொஞ்சநாளைக்குள் ந்த பூஜாரியின் மந்திரமும் தந்திரமும் வெளிச்ச ாய்ப் போனதால், இந்தமட்டில் ஓடிப்பிழைத்தாலே யிர் தப்பலாமென்று, அவனிடத்து கள்ளுசாராயத் ிற்கும் சுண்டல் தேங்காய்க்கும், அன்றூடம் காலணு ரையணுவிற்கும் சாத்துக்கொண்டு அவனுக்கு ட்டுக்கொடுத்துக் கொண்டிருந்த மொட்டை தட் ைகளையும், பிள்ளைக்கும் புதையலுக்கும் பத்து ஞ்து செலவழித்த பேதைகளையும் எங்குமுகம் வீங் ிற்க விட்டு ஓட்டம் பிடித்தான். மனமோகன் ைதயறியாதவனுய் அவன் போனவன்று ராத்திரி யும் வந்து அவன் இல்லாதது கண்டு அப்போதே கூட வந்த ஜனங்களுடன் மடையத்தூருக்குத் திரும்பிப் போக நடுவழியில் திருடர்வந்து மடக்கிக்கொண்டார் கள். அவர்களைக் கண்டதும் மனமோகன், வந்த வழியே திரும்பின ஜனங்களுக்குள் முதன்மையாய் செலித்தான். போனவர்கள் போக கால் வலிமை யின்றி அகப்பட்டுக்கொண்ட சில பெண்டிர்க்கு கிடைத்த உதை இளப்பம் சளப்பமானதல்ல. குப்பு தாய் நகைநட்டுகள் யாவையும் பதைபதைக்கப் பறித் துக்கொண்டதோடு அவள் பிராணனையும் உண்டு இல்லை என்று கண்டுவிட்டார்கள்.

இதுகிடக்க திருத்தாங்கலில் நாலைந்துநாளைக்கெல் லாம் ஓர்நாள் இரவில் மாசிலாமணியும் அவன் காதல் மனைவியும் சாப்பிட்டான பின்பு சிலநேரம் அளவளா விப் பேசிக்கொண்டிருந்தபின் மனோரஞ்சிதம் பகவத் விஷயமான சில சங்கீர்த்தனங்களை மிகவும் இனிமை யாய்ப்பாட, சிறிதுநேரம் அதைக்கேட்டுக்கொண்டி ருந்த மாசிலாமணி, உட்கார்ந்த ஆசனத்தின்மீதேசாய் ந்து உறங்கி, நித்திரையிலும் நனவிற்பேசுமாறு பேசி க்கொண்டிருந்தான். இவள் அதை உற்றுக்கேட்ட தும் அருகிற்சென்று 'நித்திரையிலும் என்னை மற வாத என்பிராணநாதா! எழுந்திருந்து மெத்தையிற் போய்படுத்துக்கொள்ளுங்கள்,' என்று சொல்லி எழு ப்ப, அவன் உறக்கமுணர்ந்தெழுந்து சமீபத்தில் நின்ற இவளைக்கண்ணுற்று: 'என் ஆருயிர்க்காதலி! இப் போது நான் ஓர் கனவு கண்டேன். அது உண்மை யில் கனவுதானே அல்லது நினைவோ அறிகிலேன்' என்று சொல்லி உடனே அவன் கண்ட கனவை யெல்லாம் விவரமாய்ச் சொல்லிக்கொண்டேவந்தா ன். அவனுக்குத் தன் மனைவியின்மேல் ஏதோ சந் தேசமுண்டாக அவளைத் தாய்வீட்டுக்கனுப்பிவிட்டு தான் காணமற்போய்விட தமயந்தி ஸ்வயம்வரம் கோரித் தன் புருஷனைக் கண்டுபிடிக்க வழிதேடி னதுபோல் அவன் மனைவி அவளுடைய தந்தை யை யழைத்துக்கொண்டு தாசிபோல் வேஷம் போட்டு அலைந்து காஞ்சீபுர உத்ஸவத்தில் தன்னைச் சூழ்ந்த கும்பில் தன் கணவனிருக்கக்கண்டு தாசி போலவே நடித்து அவனைச் சைகைக் காட்டியழைத் துப்போய் ஓர் பெரிய மாளிகையின் வாயிலில் காக்க விட்டு உள்ளேபோனதாகவும் அவன் ஏக்கமுற்றுக் காத்துக்கொண்டிருக்கையில் ஓர் பெரியவர் வந்து ஆசீர்வதித்து இந்தா உன்மனைவி இனி நீங்களிருவரும் இணைபிரியாது வாழ்ந்திருக்கக் கடவீர்களென்று ஆ சீர்வதித்து தான் தாசிப்பெண்ணென்று நினைத்த வளையே திடுக்கென்று தன்னிடம் கொண்டுவந்து விட்டுப்போக அவன் ஆச்சரியமுற்றுத் திகைத்துப் போனதாகவும் அதற்குள் அவள் எழுப்பிவிட்ட தாகவும் சொல்லி அவளைப் பலவாருகப்புகழ்ந்துகொ ண்டாடினன். அதற்கவள் 'தாங்கள் என்னை இவ் வாறு புகழ்ந்துரைப்பது எதற்காக! தங்களால் கொண்டாடப்பட்ட நான் அவ்வளவிற்குப் பாத் திரியாவேனே. தங்களுக்கின்பந்தரும் விஷயத்தில் கனவிலேனும் அல்லது நினைவிலேனும் நான் வே சியைப்போல் தோன்றினும் அதனால் எனக் குவந்த தாழ்வென்னை!' என்று சொல்லிக்கொண் டிருக்கையிலேயே திடீரென்று தெருவில் ஜன சந்தடியைக்கேட்டு எழுந்து கதவைத் திறந்துகொ ண்டு தெருவிற்குவந்தான். கூட்டத்தின் நடுவில் மனமோகன் வெறிக்கக் குடித்தான்போல், தன் மனைவியின் நடவடிக்கைகளையெல்லாம் பலரறிய எடுத்துச்சொல்லி அவளைத் தூஷித்தும் மாசிலாமணி யைப் பூஷித்தும் கீழும் மேலும் விழுந்தெழுந்து கூத்தாடுகிறன். பேச்சில் நிதானமில்லை. சகலரும் ஐயோ இவனுக்கு இப்படி பிரம்மன் விதித்தானே என்று அனுதாபப்படுகிறர்கள். அப்பவும் மாசிலா மணிக்கு அவனிடத்திற்போய் பேசவும் பயமாயிருக் கிறது. மனமோகன் இவனைக் கண்டதும் ஓடிவந்து சேர்த்துக்கட்டிக்கொண்டு 'நாசக்காலியால் நான் உன்னை விரோதப்படுத்திக்கொண்டேனடா என்

அப்ப! என்தம்பி!! இனி எல்லாம் உன்னுடையதே. எடுத்துக்கொள். வைத்துக்கொள். அனுபவித்துக்கொள்' என்று சாவியை எடுத்துக்கொடுத்துவிட்டுத் திரும்பினான். மாசிலாமணிக்கு அவனையும் அறியாமல் கண்களில் ஜலம்பெருகிவிட்டது. இவனழ, இவனைக் கண்டு மற்றவர்களழ இப்படி எல்லாரும் அழுது மனமோகனை வழிமறித்துப் பிடிக்கப்பார்த்தார்கள். அவன் நிற்கிறவழியாயில்லை. கடைசியாக அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதென்றே எல்லார் மனதிலும் பட்டது. அதற்குக் காரணம் யாதெனின்: திருடர்கள் நகை நட்டுகள் யாவையும் அடித்துப் பறித்துக்கொண்டதும் புருஷர்கள் திரும்பிவந்து குப்புதாயை மெதுவாய் மடையத்தூர் கொண்டுபோய் சேர்த்தார்கள். மறுநாள் சாயங்காலமே கிணறு வெட்டப்போய் பூதம் புறப்பட்டதுபோல் பிள்ளைவரத்திற்காகப் போனவிடத்தில் அவன் அவளை நமனுக்கிரையாக்கினான். பின்பு தகனமும் சஞ்சயனமும் நடந்தவுடனே ஆதியில் நடந்த பேச்சுப்பிரகாரம் ஐயாசாமி பிள்ளையின் சொத்துக்காக அவனுடைய அபிப்பிராயத்தைக் கேட்டான். கன்னியம்மாள் அவனுக்குத் தர உடன்படாமல் 'மருமகன் உறவு மகளோடே போயிற்று' என்று கையை விரித்துவிட்டாள். அதன்பொருட்டேயன்றோ குப்புதாயை தன் குலதேவதையாக மதித்து சர்வாதிகாரத்தையும் அவளுக்கே கொடுத்து அவள் கட்டுதிட்டத்திற்குட்பட்டு ஆராதித்துவந்தான். அதுவும் போய்விடவுந்தான் அவனுக்குப் பைத்தியம் பலமாயுண்டாய்விட்டது. மாசிலாமணி இதை யறிந்து அவனுடைய பைத்தியத்தை நீக்க தன்னாலான சர்வபிரயத்தனமும் செய்துபார்த்தான். ஒன்றும் பலிக்கவில்லை. அப்புறம்கொஞ்சநாள்வரை ஊரூராய் அலைந்து திரிந்து ஈற்றில் காணாப்பிணமாய் மாண்டனன்.

தரங்கவதிக்கு "அழச் சொல்பவர் அன்பர். சிறிக்கச்சொல்பவர் தீயோர்" என்றபடி முன்னால் தன் கணவன் சொல்லிய புத்திமதிகள் யாவும் ஏற்றுக்கொள்ளத்தக்கவையே என்றும், பணத்தினும் பாத்தியத்தினும் குணமேதான் பிரதானமென்றும் பட்டு, மனோரஞ்சிதத்துடன் ஒத்து, மாசிலாமணியின் சவரட்சணையின்கீழ் குறைவின்றி வாழ்ந்திருந்தாள். மாசிலாமணிக்குப் பழைய பூஸ்திதியாவும் சேர்ந்து மிக்க தனவந்தனாய் யாவராலும் கொண்டாடப்பட்டு மனைவியுடன்கூடி இல்லறம் நடத்திக்கொண்டு சுகமாய் வாழ்ந்திருந்தான்.

நே. சீதாராம நாயுடு.

# இந்தியாவில் ஏழைக்குடிகளின் நி மையும் அவர்களை விர்த்திக்குக் கொண்டுவரும் வகையும்.

---

### III.—ஏழைக்குடிகள் கஷ்டத்தை நிவர்த்திக்கச்சொல்லிய ஏற்பாடுகளும், காரிய சாத்தியமான உதவிவகைகளும்.

---

உற்றசமயத்தில் உதவிக்குவழியற்றிருக்கும் ஏழைக்குடிகளை அவர்கள் தற்காலமிருக்கும் ஈனஸ்திதியிலிருந்து முன்னுக்குக் கொண்டுவரும் வகையை பற்றி யோசிக்கவேண்டுமென்று சென்ற சஞ்சிகையில் சொன்னோம். இது விஷயத்தைப் பற்றி ச கார் ஏனோதானோ வென்று இருக்கவில்லை. சென் தாது வருஷத்து (1877-78-ம் வருஷத்து) பஞ்ச நேர்ந்தவுடன் அக்கொடிய பஞ்சத்தில் ஏழை ஜனங் ள் கணக்கில்லாமல் மடிந்ததையும், எங்கு பார்த்தாலு ஜனங்கள் பசியின் கொடுமைக்கு ஆளாகிப் பொறு க முடியாத வருத்தங்கள் அனுபவித்ததையும் பார் துச் சகியாமல் கவர்ன்மெண்டார் உடனே ஒ கமிஷன் நியமித்து அதுபோன் கொடிய பஞ்சம் இனிநேரிடாவண் ணம் தடுக்க அடிக்கடி பஞ்சம் நேரி டுவதற்குள்ள காரணங்களையும் அவைகளை நிவ திப்பதற்கேற்ற வழிவகைகளையும்பற்றி விசாரித் ரிபோர்ட்டு செய்யும்படி உத்திரவு செய்தார். அவர்களும் அப்படியே விசாரித்து மிகவும் சவிஸ்தாரமான ரிபோர்ட்டு ஒன்று எழுதியனுப்பினார்கள். அவர்கள் எடுத்துக்காட்டிய பல அனுகூலமான ஏற்பாடுகளைக் கவர்ன்மெண்டார் இந்த 16-வருஷகாலமாகச் சிறுகச்சிறுக அனுஷ்டானத்துக்குக் கொண்டுவந்திருப்பதோடு இன்னும் அவ்வழியிலே சென்று மேன்மேலும் குடிகளுக்குச் சாதகமான ஏற்பாடுகளைச்செய்வதிலே முயற்சியாயிருக்கிறார்கள். தெய்வகிருபையால் அவர்கள் முயற்சியும் சிறுகச்சிறுக கைகூடிவரக்காண்கிறோம். அடிக்கடி பஞ்சம் நேரிடுவதை முற்றும் நிறுத்தமுடியாமற்போனாலும் அதன் கொடுமையைச் சாந்தப்படுத்த முன்னிலும் இப்பொழுது எத்தனையோ சாதகங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவைகளில் பஞ்சத்தைத் தடுப்பதற்காகவென்று போடப்பட்ட ரெயில்பாதைகள், வெட்டப்பட்ட சால்வாய்கள் முதலியன மிகவும் விசேஷமானவை. மேலே சொன்ன 'பஞ்சநிவர்த்திகமிஷன்' சபைமெம்பர்கள் ஏழைப் பயிரிடுங்குடிகள் நிலைமையை விர்த்திக்குக் கொண்டுவருவதற்கு உபயோகமான வழிவகைகள்

பஞ்ச நிவர்த்தி கமிஷன்.

அவர்கள் வழி
ாகவந்த சிலஏற்
ாடுகள்.

லவற்றையெடுத்துத் திரயோஜித்துத் தர்க்கித்துப்
பசியிருக்கிறார்கள். அப்படிப்பேசியிருப்பதில்ஏழை
க்குடிகள் கடனில் மூழ்கியிருப்பதி
னின்றும் அவர்களைக் கரையேற்
றச் சில ஏற்பாடுகள் செய்யலா
மென்று சொல்லியுளர். அவைகளில் முக்கியமான
லவற்றையெடுத்து ஆராய்ந்துபார்த்து திவான் பஹ
ார் ஸ்ரீனிவாஸராகவையங்கார் அவர்கள் அதிகசிர
ம் வகித்து எழுதியிருக்கும் அவருடைய புஸ்தகத்
தில் தம்முடிவான அபிப்பிராயத்தை வரைந்திருக்
கிறார். மேற்படி கமிஷனில் ஒரு மெம்பரான காலஞ்
சென்ற **ஸர் ஜேம்ஸ் கேயிர்ட்** அவர்கள் நிலவரியை
இப்பொழுதைப்போல் பணமாக வசூல் செய்யாமல்

பணவரிக்கு
திலாக மகசூலை
பங்கிட்டுக்கொ
ள்ளலாமா?

முற்காலத்தில் நடந்துவந்ததுபோ
ல் நிலத்தில் விளைந்ததை சர்க்காரும்
குடியுமாகக் குறித்த விகிதப்படி
பங்கிட்டு கொள்ளும் ஏற்பாட்க்
டுக்குத் திரும்பிச் சென்றால் ஏழைக்குடிகள் விளை
வுகுன்றிய காலங்களில் கடன்கொடுப்போரிடத்
திற்சென்று கடன் வாங்கவேண்டிய நிர்ப்பந்தமின்றி
விளைந்ததைச் சர்க்காருக்குப் பங்கிட்டுக்கொடுத்து
விட்டுத் தன் பங்கைக்கொண்டு எப்படியோ கஷ்ட
ஜீவனம் செய்துவரக்கூடுமென்று சொன்னார். இது
தற்காலத்தில் காரியசாத்தியமானதில்லையென்று ஷை
கமிஷன் சபையார் ஒன்றுகூடித் தள்ளிவிட்டார்கள்.
இது காரியசாத்தியமானதில்லையென்பது வாஸ்தவ
மே. பூர்வகாலத்திலும்கூட இந்த ஏற்பாட்டால் குடி
களுக்கு அதிகசாதகம் உண்டானதாகச் சொல்வதற்
கில்லை. "தலைவலிபோய் திருகுவலி வந்தது" என்
கிற சங்கதியாய் குடிகளை விளைச்சல் குன்றிய காலத்
தில் சர்க்கார் உபத்திரவத்தினின்று நீக்கயத்தனித்து
அவர்களை உத்தியோகஸ்தர்கள் அநியாயத்துக்கும்
அக்கிரமத்துக்கும் ஆளாக்கி சர்க்கார் செய்யக்கூடிய
உபத்திரவத்திலும் பதின்மடங்கதிகமான உபத்திர
வங்களுக்கு உள்ளாக்கவேண்டியதாக முடியும். புது
க்கோட்டை சமஸ்தானத்தில் இந்த ஏற்பாடு கொஞ்
சகாலமுன் வரையில் ஊர்ஜிதத்திலிருந்தது. அத
னால் விளைந்த கெடுதிகளைப்பற்றி புதுக்கோட்டை
திவான் ரிஜெண்டாயிருந்த ம-ா-ா-ஸ்ரீ ஏ. சேஷய்ய
சாஸ்திரியார் அவர்கள் சித்தரித்துக்காட்டியதுபோல்
விளங்கும்படி விவரமாய் எழுதியிருக்கிறார். அத
னால் நேரிடும் துன்பங்களும் சில்லரை உத்தியோக
ஸ்தர்கள் செய்யும் அக்கிரமங்களும் குடிகளுக்கு
நேரும் ஹிம்சைகளும் நாட்டுப்புறக் குடிகள் எல்லா
ருக்கும் தெரிந்திருக்கக்கூடியதே யாதலால் இங்கு
விவரிக்க நிமித்தமில்லை.

நிலத்தை விற்
றல் அடைமானம்
வைத்தல் கூடா
தென்று தடுக்க
லாமா?

ஸர்ஜேம்ஸ் கெயர்ட் அவர்கள் சொல்லிய இன்
னொரு ஆலோசனை என்னவெனில் குடிகள் தங்கள்
நிலங்களை விற்கவாவது, அடை
மானம் வைத்துக் கடன்வாங்க
வாவது கூடாதென்று சொல்லி,
இவ்விருவிதத்திலும் அவர்களிப்
பொழுது அனுபவித்துவரும் பாத்
தியதையைப் பிடுங்கிவிட்டால் நிலம் பயிரிடுங்
குடிகள் கையைவிட்டு மாறிப்போக வகையில்லாமற்
போகுமென்று சொன்னார். பஞ்ச நிவர்த்தி கமி
ஷன் சபையார் இதையும் அங்கீகரிக்கவில்லை. இது
வும் உபயோகமற்றதன்றி இவ்விராஜதானியில் தீங்கு
விளைக்கக்கூடியதாகுமென்பது சற்று நிதானித்துப்
பார்ப்போருக்கு விகசிதமாய்ப்படும். இவ்விராஜ
தானியில் பயிர்த்தொழில் ஜீவனம் செய்யும் குடி
கள் தங்களால் மிகுக்கப்பட்ட பணத்தை நிலத்தி
ல்போட்டு சொந்த நிலத்தில் பாடுபட்டுழைத்து
சுவாதீன ஜீவனம் செய்யப் பார்க்கிறார்க ளென்று
இத்தலைப்பின் கீழ் முதல் தடவை எழுதிய விஷயத்தி
ல்காட்டியிருக்கிறோம். நிலம் அதில் நேரப் பாடுபடக்
கூடியவர்கள் கைவசத்திற்போவது தேசக்ஷேமத்தி
ற்கு நன்றே யாதலால் அதற்கு இடையூறு ஏற்படு
த்துவது யுக்தமல்லவென்று ஏற்படுகிறது. அன்
றிப் பயிரிடுங்குடிகளே நிலம் வைத்தாளுவது வழ
க்கமாயிருக்கும் தேசங்களிலெல்லாம் பிதிரார்ஜித
சொத்தைப் பிள்ளைகள் சரிசமமாகப் பங்கு போட்டுக்
கொள்வதால் நிலம் அதிநுட்பமான சிறு துண்டு
களாகப் பிரிவுபட்டு போவதிலிருந்துண்டாகும் கெடு
தலைத் தடுக்க நிலத்தைத் தாராளமாக ஒருவர் மற்றொ
ருவர் பேருக்கு மாற்றச் சுதந்தரம் இருக்கவேண்டி
யது அவசியமாயிருக்கிறது. ஆகையால் இதுவும்
காரியத்தில் உபயோகமானதல்லவென்று தள்ளப்
பட்டது.

கீழ்க் குத்தகை
க்கு விடுவதுகூடா
தென்றேற்படுத்த
லாமா?

மேலே சொன்ன பஞ்சநிவர்த்தி கமிஷன் சபை
யார் ரயத்துகள் தங்கள் நிலத்தை
கீழ்க் குத்தகைக்கு விடுவது கூடா
தென்று தடுப்பது நலமாயிருக்கு
மென்று சிபார்சு செய்தார்கள். இ
து பம்பாய் இராஜதானியிலுள்ள தக்காணத்துக்குடிகள்
நிலைமையை யனுசரித்து அவர்களுக்கேற்பச் சிபார்சு
செய்யப்பட்ட ஏற்பாடாகத் தோன்றுகிறது. இவ்
வேற்பாடு செய்தால் நிலத்துக் குடையவர்கள் சொந்
தப் பண்ணைவைத்து நிலத்தைப் பயிரிடவேண்டிய
தவசியமாக நேரிடும். அல்லது தங்கள் சொந்த ஏஜ
ண்டுகளை நியமித்து அவர்களுக்குள் கூலியாட்களை நிய

இப்படிச்செய்தால் ரயத்துகள், சீர்திருத்தமுறைப்படியுள்ள வியவசாய ஏற்பாடுகளை அனுஷ்டானத்துக்குக் கொண்டுவருவது துர்லபமாக விருக்கும் வறட்சி நிலங்களில் ஒருபாகத்தைத் தரிசுபோட்டு ஒருபாகத்தைச் சாகுபடி செய்வது சாத்தியமாகும். உதாரணமாக அனந்தப்பூர் ஜில்லாவில் 100-ல் 14-பங்குநிலங்கள், காலமழையில்லாமையால் சாகுபடி செய்யமுடியாமல் தரிசுபோட்டுவைக்கப்படுகின்றன. கவர்ன்மெண்டார் மேலேசொன்ன சாதகம் செய்யும்பக்ஷத்தில் மட்டமான நிலங்களிற்கு விதித்திருக்கும் வரிவிகிதத்தை இப்பொழுதைவிடக்கொஞ்சம் அதிகமாக விதிக்கலாம். ஜில்லாமுழுமையும் 'ஸர்வே' ஆகியிருக்கிறபடியால் நிலங்களில் இன்னபாகம் சாகுபடி செய்யப்பட்டது இன்னபாகம் தரிசாகக்கிடந்தது என்று அறிந்து நிச்சயிப்பது இலகுவான காரியமே; இதனால் மேலுத்தியோகஸ்தர்களுக்கு அதிக கஷ்டம் நேரிடும்படியாயிருக்குமென்று சொல்வதற்கில்லை; அவர்கள் மேன்பார்வை செய்யும்பொருட்டு ஜாக்கிரதையாய் நிலங்களைப் பார்வையிட்டுப் பரிசீலனை செய்துவரவேண்டியிருப்பதால் ரெவினியூ உத்தியோகஸ்தர்கள் தங்கள் மேன்பார்வைக்குள்பட்ட நிலங்களின் வியவசாய நிலைமையை நன்றாயறிந்தவர்களாக விருப்பார்கள். தாசில்தார்களுக்கிருந்த மாஜிஸ்திரேட்டு வேலைகள் அவர்களைவிட்டு நீங்கிப்போய்விட்டபடியாலும், தாசில்தார்களுக்கு உதவியாகவிருக்கும்படி சமீபகாலத்தில் அதிகப்படி ரெவினியூ இன்ஸ்பெக்டர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்களாகையாலும் மேலேசொன்ன ஏற்பாடு முன்னைவிட இப்பொழுது ஜனங்களுக்கு உபத்திரவம் விளைக்க நேரிடுமென்கிற பயமின்றிக் காரியத்தில் நிறைவேற்றக்கூடியதாயிருக்கிறதென்று திவான் பஹதூர் ஸ்ரீனிவாஸராகவையங்கார் அவர்கள் அவருடைய புஸ்தகத்தில் மேலேசொன்ன விவரங்களோடு நன்றாயெடுத்துக் கூறுகிறார்.

மேலேசொன்ன இரண்டுவித ஏற்பாடுகளும் ஏழைக்குடிகளுக்குக் கடன்வாங்கும்படியுள்ள நிர்ப்பந்தங்களைக் குறைக்கும் வகையில் செய்யத்தக்கவையாம். நாட்டுப்புறத்து ஏழைக்குடிகள் கடனில் மூழ்கிக் கிடப்பதினின்று கரையேறச்செய்யவும், நிலவிர்த்தி செய்வதற்கும் மற்ற அவசரங்களுக்கும் நியாயமான வட்டிக்குக் கடன் கிடைக்கும்படி செய்யவும், சர்க்கார் மிகப் பயன்படும் வழியில் அவர்களுக்கு உதவி செய்யும்வகை யொன்றிருக்கிறது.

"வியவசாய பாங்கிகள்" ஏற்பாடு.

அது என்னவெனில், அங்கங்கே ஏழைக் குடிகளுக்கு சல்லிசான வட்டிக்குக் கடன் கொடுக்கும்படி அதிக லாபத்துக்கு ஆசைப்படாமல் செலவுக்கு வேண்டியமட்டிற்குக்கண்டு சொற்ப மிகுதிக்கே யிடந்தரும் விதமாக வட்டி யேற்படுத்தி ஏழைகளுடைய யோக்கியதையறிந்து கடன் கொடுத்துதவும் ஜனோபகார நிதிகள் அல்லது **பாங்கிகள்** ஏற்படுத்த வேண்டிய சாதகங்கள் செய்வதேயாம். இந்த பாங்கிகள் முதல் முதல் வியவசாயிகளுக்குதவிபுரியத்தக்கனவாக ஏற்படுத்தவேண்டியது இத்தேச நிலைமைக்கு அவசியமாயிருத்தலால் இவைகளை பிரதமத்தில் "**வியவசாய பாங்கிகளாக**" ஏற்படுத்துவது உசிதமாம். இப்படிப்பட்ட **பாங்கிகள்** ஏற்படுத்தவேண்டியது அவசியமென்பதைச் சென்னை கவர்ன்மெண்டார் ஏற்கனவே கிரகித்துணர்ந்து அதற்காக எடுத்துக்கொள்ளவேண்டிய வழிவகைகளைப்பற்றித் தீரவிசாரித்து

இதுவிஷயமாய் மிஸ்டர் நிக்கல்ஸன் யோஜித்துவரல்.

ரிபோர்ட்டு செய்யும்படி மிஸ்டர் எப். ஏ. நிக்கல்ஸன் அவர்களை நியமித்திருக்கிறார்கள். அவரும் இதற்காகவென்று ஐரோப்பாவுக்குச் சென்று அங்குள்ள தேசங்களில் ஏழைக்குடிகளுக்குதவிபுரிய ஏற்பட்டுள்ள ஜனசகாயநிதிகள், அல்லது ஜனோபகாரநிதிகள் என்று பொருள்படும் பலவகை நிதிகள், சங்கங்கள், பாங்கிகள் முதலான ஸ்தாபனங்கள் நடத்தப்பட்டு வரும் முறைகளை நேரில் விசாரித்தறிந்து, இந்தியாவிலுள்ள பயிரிடுங்குடிகளின் நிலைமையைப்பற்றி அவர் ஊக்கமுடன் விசாரித்தறிந்த விஷயங்களைக்கொண்டு இத்தேச சுபாவத்துக்கும் இத்தேசக் குடிகளின் நிலைமைக்கும் இதர சந்தர்ப்பங்களுக்கும் ஏற்குமாறு திரவிய நஷ்டம் அல்லது வீண் சேதத்துக்கு இடமின்றி ஏழைக்குடிகளுக்கு இலகுவில் உதவிபுரியக்கூடிய விதமாய் "**வியவசாய பாங்கிகள்**" ஏற்படுத்தும் வகையைக்குறித்து யோஜித்துவருகிறார். அவர் இதுவிஷயமாய் யோசித்து எழுதிவரும் ரிபோர்ட்டை சர்க்காரும் இதுவிஷயத்தில் சிரத்தை யெடுத்துக் கொள்ளும் மற்றவர்களும் அதிக ஆவலோடு எதிர்பார்த்திருக்கிறார்கள். அவருடைய ரிபோர்ட்டுக் கிடைத்ததும் கவர்ன்மெண்டார் இதுவிஷயத்தைப்பற்றிக் காரியத்தில் ஏதாவது ஒரு ஏற்பாடுசெய்ய முயற்சிப்பார்கள். இந்த ஏற்பாடு பலிப்பதற்கு சர்க்காருடைய உதவியோடு, யாருடைய நன்மையை நாடி இந்த ஏற்பாடு செய்யப்படுகிறதோ அவர்களுடைய சொந்த முயற்சியும்,—பலவிஷயங்களிலும் கூடி யுழைத்து பரஸ்பர சகாயம் செய்துகொள்ளும் விதத்திலும், தங்களுடைய சொந்தநாணயம், யோக்கியதை இவை

இவ்வேற்பாடு பலிக்க ஜனங்களுடைய சொந்த முயற்சியும் உதவியும் தீரா அவசியம் என்பது.

களை விர்த்திசெய்துகொள்ளத் தன்முயற்சி செய்யும் விதத்திலும், அவர்களுடைய சொந்த உதவியும் அதிக விசேஷமாகவேண்டியது தீரா அவசியமாகவிருப்பதால் இதுவிஷயத்தைப்பற்றி அவர்களுக்கு முன்னதாகவே தெரிவித்து இந்நூதன ஏற்பாட்டைப்பற்றி யோஜிக்கும் வழியில் அவர்கள் மனதைத் திருப்பி இந்த ஸ்தாபனங்களை ஏற்படுத்துங்காலம் கிட்டும்போது அவைகளைப் பெற்றுப் பயன்பட உபயோகித்து வருவதற்கு அவர்களைப் பக்குவப்படுத்தும் பொருட்டே இதுவிஷயத்தைச்குறித்து இங்கு விவரித்தெழுத ஆரம்பித்தோம். இதுவரையில் எழுதிவந்ததெல்லாம் "வியவசாய பாங்கிகள் ஏற்பாட்டை"க் குறித்து விவரித்துப் பேசுவதற்கு முன்னுரையாகச் சொல்லவேண்டியிருந்த விஷயங்கள். இனி இவ் வியவசாய பாங்கிகள் ஏற்படுத்துவதற்கு அனுசரணையாகவுள்ள ஏற்பாடுகள், பிரதமக்கொள்கைகள், இதர ஸ்தாபன ஏற்பாடுகள் இவைகளைப்பற்றிச் சொல்வோம்.

C. V. S.

# சிறுகுழந்தைகளுக்குச் சொல்லும் சிறுகதைகள்.

**(Gleanings for an Indian Kindergartner.)**

[இக்காலத்துச் சிறுவர்களும் வாலிபர்களும் பண்டைக்காலம் என்றால் சிறிதும் யோசனையின்றி வெகு இளப்பமாக நினைத்துப்பேசுவது வழக்கமாய்விட்டது. இக்காலத்து இளம் பருவமுள்ள புருஷர்கள், ஸ்திரீகளும் அவர்களைப்பார்த்து மற்றச்சிறுவர் சிறுமிகளும் வயது முதிர்ந்த பெரியவர்கள் இக்கால சுபாவமறியாமல் ஏதாவது சொல்லிவிட்டால் "ஆம், ஆம்! அவாளுக்கு என்ன தெரியும், சுத்தக் கர்னாடக மனுஷாள்" என்று தாங்கள் எல்லாமறிந்த பாவனையாகப் பெருமிதம் கொண்டு பேசுவதை எல்லாரும் அனேகமாய்க் கேட்டிருக்கலாம். இப்படி கர்னாடக காலம் அதாவது பண்டைக்காலம் தாழ்வானதாகவும் இந்தக் காலம் உயர்வானதாகவும் மதிப்பது சகஜமாயிருக்கிறது. பண்டைக்காலத்தை விட இக்காலத்தில் கல்வி, நாகரீகமும் அதனால் புத்திவிர்த்தியும் எவ்வளவோ அதிகரித்திருக்கிற தென்பது உண்மையே. ஆனால் இந்த அபிவிர்த்தியெல்லாம் எப்படி உண்டாயிற்றென்று கொஞ்சம் நிதானித்து யோசித்துப்பாருங்கள். நமது தகப்பனார் பாட்டனார் காலத்திலோ அதற்கும் முந்தியோ ஒருவன் எவ்வளவோ பாடுபட்டு அவனுடைய சுயபுத்தி வலிமையாலும் யுக்தி விசேஷத்தாலும் ஒரு நூதன விஷயம் அல்லது சூக்ஷமம், அல்லது யந்திரத்தைக்கண்டு பிடிக்கிறான். அவன் சொல்ல முடியாத கஷ்டநஷ்டங்களுக்குட்பட்டு ஆயிரந்தரம் அவனுடைய யத்தனங்கள் ஏதோ அவனறியாத தப்புத்தவறுகளால் பலிக்காமற்போனபின் கடைசியில் உண்மைவழி யின்னதென்று கண்டுபிடித்து மற்றவர்கள் தன்னைப்போல் அடிக்கடி பிசகிப்போகாவண்ணம் அவ்வுண்மையை நன்றாக விளங்க வைக்கப்பாடுபடுகிறான். அவனுக்குப் பின்வரும் அவன் பிள்ளை, தகப்பன் பல வருஷகாலம் பாடுபட்டுப் பலதடவை பிசகிப்போய் தட்டுத்தடுமாறிக்கண்டுபிடித்த சூக்ஷமத்தை சிறுவயதிலேயே தான் சரியாகக்கையாளக் கற்றுக்கொள்கிறான். இப்படி தகப்பன் கஷ்டப்பட்டுக் கற்றவித்தையெல்லாம் பிள்ளைக்குச் சுலபமாக சித்திப்பதுபோலவே ஒவ்வொரு காலத்திலுள்ளவர்களும் அவர்களுக்கு முன் காலத்திலுள்ளவர்கள் கஷ்டப்பட்டுக் கண்டுபிடித்த நூதன வித்தை, அறிவு எல்லாவற்றையும் சுலபத்தில் தங்களுடையதாக்கிக்கொண்டு அதற்குமேல் தங்கள் புத்தியை விர்த்தி செய்துகொள்ளப் பார்க்கிறார்கள். இதனால் காலம் செல்லச் செல்ல உலகில் விர்த்தியதிகரித்துக்கொண்டு வருவது மிகவும் சகஜமாகத் தோன்றும். ஆனால் இப்படிப்பட்ட விர்த்தியுண்டாவதற்குப் பின்காலத்து மனிதர்கள் முன்காலத்து மனிதர்களிடத்திருந்துவந்த அறிவு, ஞானம், ஆசார அனுஷ்டானங்கள் இவற்றில் உபயோகமாயுள்ளவற்றைப் பகுத்தறிந்து கிரகித்துக்கொண்டு உபயோகமில்லாதவற்றையே ஆராய்ந்து தள்ளுவதற்கு வேண்டிய பகுத்தறிவு விசேஷமாய் இருக்கவேண்டியது தீரா அவசியம். இப்பகுத்தறிவு குறையக் குறைய ஒரு தேசத்து ஜனங்கள் தங்கள் முன்னோர் நிலைமையை விடத்தாழ்ந்த நிலைக்கு வருவதும், மேற் குறித்த பகுத்தறிவு விர்த்தியாக ஆக அவர்களும் காலம் போகப்போக மேன்மேலும் விர்த்தியடைந்து மேன்மைப்பட்டு வருவதும் பிரத்தியக்ஷமாக விளங்கும். அந்நிய வழக்கங்களை யனுசரிப்பதிலும் இக் கோட்பாடு முற்றும் பொருந்தத் தக்கதே. ஆகையால் நாம் ஒரு விஷயத்தை நல்லது கெட்டதென்று அதை அனுஷ்டிக்கவோ தள்ளும்படி செய்யவோ தீர்மானிக்கு முன் நமது பகுத்தறிவை யுபயோகித்து அதிலுள்ள குணத்தையும் குற்றத்தையுமாராய்ந்தறிந்து குணமாயிருப்பதைக்கிரகித்துக்கொண்டு குற்றமாயிருப்பதை விலக்கித் தள்ளல்வேண்டும். இப்பொழுது தலையெடுத்துப் பெரியவர்களாயிருக்கும் வாலிபர்கள் இந்த விதியை அதிகமாய் அனுசரித்தவர்களில்லை யென்

பது அனேக விதங்களில் பிரத்தியக்ஷமாய் விளங்குகிறது. இல்லாவிட்டால் புது நாகரிகச்செருக்கில் பண்டைக்காலத்து வழக்கத்திலுள்ள நல்ல ஏற்பாடுகளைக்கூடக் கைநழுவவிட்டுக் கண்மூடிகளாய்த் திரியமாட்டார்கள். இதற்கு உதாரணமாக குழந்தைகளுக்குச் சொல்லும் சிறு கதைகளைப்பற்றி யோசிப்போம். இக்காலத்துச் சிறுவர்கள் "கர்நாடகம்" என்று பழிக்கும் பண்டைக்காலத்தில் பெண்கள் புஸ்தகப் படிப்பில்லாதவர்களாயிருந்தாலும் உலகானுபவத்தில் முதிர்ந்தவர்களாய்ச் சிறுவர்களுக்குத் தக்கபுத்தி சொல்வதிலும் குழந்தைகளைத் தக்கபடி வளர்ப்பதிலும் மகா புத்திசாலிகளாக விருந்தார்கள். இக்காலத்துப்படித்த பெண்கள் குடித்தனப் பாங்கிலும் குழந்தைகளை வளர்ப்பதிலும் அக்காலத்துக் "கிழங்கள்" என்று நாம் நிந்தனையாகச் சொல்லும் ஸ்திரீகளுக்கு ஒரு போதும் ஈடாகார்கள். சென்ற சஞ்சிகையில் **கிண்டர்கார்டனைப்பற்றி** எழுதியிருந்ததையெல்லாம் பார்க்கச் சிறு குழந்தைகளுக்குச் சொல்லும் கதைகள் சில என் ஞாபகத்துக்கு வந்தன. 3-வயதுக் குழந்தைகளுக்கெல்லாம் கிண்டர்கார்டனில் விளையாட்டுப்போல் படிப்புச்சொல்லிக்கொடுத்து அவர்கள் புத்திவிர்த்தி தேகவிர்த்திக்கு வேண்டியவைகள் செய்யப்படுவது வழக்கமென்று சொல்லியிருந்ததை நம் சிறுவர் "கர்நாடகக்கிழம்" என்று சொல்லக்கூடிய ஒரு பெரியவரிடம் படித்துக்காட்டிப் பின்னுமதைப்பற்றி அவரோடு பேசிக்கொண்டிருந்தேன். அப்போது அவர் **சிறுகுழந்தைகளுக்குச் சொல்லும் சிறு** கதைகள் பல சொன்னார். அவைகளைக் கேட்டபின் யூகித்துப்பார்த்ததில் அவற்றிலனேகம் இப்புது ஏற்பாட்டுப்படிக் குழந்தைகளைச் சரியாகப்பயிர்ச்சி செய்வதற்கு மிகவும் ஏற்ற விதமாக அமைந்திருப்பதைக்கண்டு அதிசயமுற்றேன். அவர் சொல்லிய சிறு கதைகள், பாட்டுகள், விளையாட்டுகள், இவைகளையெல்லாம் **கிண்டர்கார்டன்** முறையைக்கொண்டு ஆராய்ந்து சீர்தூக்கிப் பார்க்கையில் அவைகள் சிறு குழந்தைகளுக்குப் பயிர்ச்சிசெய்யும் விதத்தில் எவ்வளவோ விலையேறப்பெற்ற சாதனங்களாக விளங்கின. அவற்றில் சிலவற்றை **கிண்டர்கார்டன் முறை** தெரிந்தவர்கள் ஆராய்ந்துபார்த்து அவைகளின் உபயோகத்தை நிதானித்துரைப்பார்களென்று கீழே வரைந்து அவைகளைப்பற்றிய விவரணங்களையும் நாம் விசாரித்தறிந்த மட்டில் ஒருவாறு சேர்த்துரைக்கிறோம்.]

(i) "**கதை கதையாம்.**"

சிறு குழந்தைகள் "பாட்டி பாட்டி ஒரு கதை சொல்லு" என்று கேட்கும்பொழுது முதல் முதலில் பெரிய கதைகளைச்சொன்னால் சிறு குழந்தைகளுக்குக் கிரகித்துக்கொள்ளும் சக்தியிருக்காதாதலால் ஒரு சிறிய கதை சொல்லுகிறேன் கேள் என்று பின்வருமாறு சொல்வது வழக்கம். ஆனால் அவர்கள் சொல்வது வாஸ்தவத்தில் ஒரு கதையன்று. சிறு குழந்தைகள் ஒரு கதைசொல் என்று கேட்டால் கதை சொன்னால் உனக்குத்தெரியாதென்று சொல்லி குழந்தைகள் வாயையடக்குவது சரியல்லவென்று அவர்கள் சந்திக்குத்தக்கினதும், அவர்கள் வரிசைக் கிரமமாய் ஒன்றின் பின் ஒன்றாக நினைத்துக்கொள்வதற்கெளிதானதுமாக மிகவும் சுலபமான கட்டுப்பாட்டுக் கவிளாகச் சில சொல்வது வழக்கம். சிறு குழந்தைகளுக்கு எல்லாம் புதிதாதலால் அவர்கள் ஓர் கதைகேட்க, பாட்டி "கதை கதையாம்" என்று ஆரம்பித்து மேலே சொல்லிக்கொண்டு போவதை அதிக ஆவலோடுகேட்டு அதைத் தாங்களே சொல்லி யத்தனிப்பார்கள். அவர்கள் இப்படி சொல்லக்கற்றுக் கொள்ளவேண்டுமென்றே அதிக சுலபமாகவும் தந்திரமாகவும் வார்த்தைகள் அமைக்கப்பட்ட அச்சிறு கவிகளைச் சொல்வதில் அவர்களுக்கு அதிக உற்சாகமும் மனக்களிப்புமுண்டாவதோடு அவர்களறியாமலே அவர்களுடைய ஞாபகசக்தியை ஒருவாறு விர்த்திசெய்யத் தக்கதாகவும் உதவுகிறது. கதை சொல் என்று கேட்ட குழந்தைக்கு முதல் முதலில் சொல்லும் "கதை கதையாம்" என்னும் பாட்டைக்கீழே வரைகிறோம்.

கதை கதையாம் காரணமாம்
காரணத்திலொரு தோரணமாம்
தோரணத்திலொரு கலியாணமாம்
கல்யாணத்திற்கு சாப்பிடப்போனேன்
இலையின் கீழே பாம்பு இருந்தது
பாம்படிக்கக் கோலுக்குப்போனேன்
கோலெல்லாம் தேனாயிருந்தது
தேனலம்ப குளத்திற்குப்போனேன்
குளமெல்லாம் மீனாயிருந்தது
மீன்பிடிக்க வலைக்குப்போனேன்
வலையெல்லாம் கிழிந்திருந்தது
கிழிசல் தைக்க ஊசிக்குப்போனேன்
ஊசியைத் தொட்டவன் உருண்டுபோனான்.

இந்த வாசகத்தினருத்தம் வெகு சுலபம். ஏதோ ஒரு வீட்டில் தோரணம் கட்டியிருந்தபடியால் அந்த வீட்டில் கலியாணம் நடக்கிறதென்று ஒரு குழந்தை சாப்பிடப்போனதாகவும், இலையின் சமீபத்திலுட்கார்ந்தபொழுது அந்த இலையின் கீழ் ஒரு பாம்பிருந்ததாகவும், அதை அடிக்க கோல் தேடுகையில் கோல் ஒன்று கிடைத்ததாகவும், ஆனால் அது தேனாக இருந்தபடியால் அதைக்கழுவ குளத்திற்குப் போனதாகவும் இப்படியே பிறவும் நடந்ததாக ஏற்படுகிறது. சிறு குழந்தைகளுக்கு ஞாபகசக்தியுண்டாவதற்கு முன் யூகித்தறியும் சக்தி கிடையாதாதலால் அவர்கள் ஞாபகசக்தியைக் கிளப்புவதற்கு வேண்டியது எவ்வளவோ அந்த மட்டிலே இதைக்கவனித்து வேடிக்கையாகச் சொல்லிக்கொண்டு போகையில் கொஞ்சம் வயதாகி யூகித்தறியும் சக்தி யுண்டான குழந்தைகள் கூடவிருந்தால் அவர்கள் இடையில் பாம்பு அடிக்கக் கோலுக்குப்போனால் கோலகப்பட்டதும் தேனாயிருக்கிறதென்று பாம்பை யடிக்காமல் ஏன் அதைக்கழுவ குளத்துக்குப் போகவேண்டுமென்று கேட்பார்கள். கேட்ட கேள்விக்குச் சரியான உத்தரம் சொல்லாவிட்டால் குழந்தைகள் இலகுவில் விடார் ஆகையாலும், இக்கதை பெரிய குழந்தைகளுக்கின்றி மிகவும் சிறிய குழந்தைகளுக்கென்றே சொல்லப்படுவதாலும், அவர்கள் சொல்லும் ஆக்ஷேபணைக்குச் சரியான சமாதானம் சொல்லும் பொருட்டு பாட்டி பெரிய குழந்தையைப் பார்த்து வெகு அருத்தத்தோடு கண்ணைச்சிமிட்டி "கதைக்குக்காலில்லையென்று உனக்குத்தெரியாதா" என்று சொல்லிவிட்டு மேலே கிரமமாக வாசகத்தை ஓட்டிக்கொண்டு போவது வழக்கம். சிறு குழந்தைகள் அதைக்கொண்டு திருப்தியடைந்தவர்களாய் கதையைக்கேட்டு மகாசந்தோஷப்படுவார்கள். தேனிலிருந்து குளத்துக்கும், குளத்திலிருந்து மீனுக்கும், மீனிலிருந்து வலைக்கும், வலையிலிருந்து ஊசிக்குமாகக் கண்ணிற்பட்ட வஸ்துக்கள் என்ன என்னவோ அவைகளைத் தொட்டுத்தொட்டு மனம் தாவியோடின வண்ணம் விட்டுவந்ததற்குக் கடைசியில் ஒரு முடிவு கட்டவேண்டியிருந்ததால் "ஊசியைத் தொட்டவன் உருண்டுபோனான்" என்று சொல்லி முடிக்கப்பட்டிருக்கிறது. உற்றுநோக்கில் இது சிறு குழந்தைகளின் மனோபாவ சக்தியையும் சிறிது தூண்டுவதாகிறது விளங்கும். இந்தக்கதை சொன்னபின்பு குழந்தைக்கு வரிசைக்கிரமம் ஒன்றின்பின் ஒன்றாகக் கற்றுக்கொடுக்க 'பாட்டி' அல்லது யார் கதை சொல்லுகிறார்களோ அவர் விஷயங்களின் முறையை தோரணம்—கல்யாணம்—சாப்பாடு—இலை—இலையின்கீழ் பாம்பு—பாம்படிக்கக்கோல்—கோலின் மேல் தேன்—தேனலம்ப குளம்—குளமெல்லாம் மீன்—மீன் பிடிக்க வலை—வலையோ கிழிசல்—கிழிசல் தைக்க ஊசி—ஊசியை தொட்டவன் உருண்டான் என்று இரண்டொரு தடவை சொல்லி அந்த குழந்தையை நோக்கி, வசியம் செய்துகொள்ளத்தக்க இனிய மொழிகளால் "எங்கே **கதைகதையாம்** என்பதை நீ சொல்லு பார்ப்போம்" என்று கேட்பது வழக்கம். சில குழந்தைகள் 2, 3-தடவைகளில் **கதைகதையாம்** என்பதை சரியாகச் சொல்லிவிடும். சில குழந்தைகளுக்கு 4, 5, 6-தடவைகளும் செல்லும். இப்படியாக அ, ஆ, என்கிற அக்ஷரங்களைச் சொல்லிக் கொடுத்து ஞாபகமாகச் சொல்லும்படி செய்யமுடியாத சிறு குழந்தைகளெல்லாம் சிரிப்பும் சந்தோஷமுமாக விளையாடிக்கொண்டே வருத்தமென்பதை யுணராமல் 12, 13 வரிகளுள்ள அக்கதையை சுளுவில் ஒப்புவிக்கக் கற்றுக்கொண்டுவிடும். இதனால் குழந்தையின் ஞாபகசக்திக்குண்டான பயிர்ச்சி அற்பமென்று அலக்ஷியம் செய்யத்தக்கதல்ல. இந்தக் கதையை இன்னும் பெரிதாக வளர்த்தி வேறொரு விதமாகவும் சொல்வது சில இடங்களில் வழங்கிவருகிறது. அதை அடியில் நக்ஷத்திரக்குறியிட்டு சின்ன எழுத்துகளில் அச்சிட்டுக் காட்டியிருக்கிறோம்.*

---

* (வேறுபாடம்.)

கதைகதையாம் காரணமாம்
காரணத்தில் ஒருழக்காம்
ஒருழக்கில் புல்முளைத்தது
புல்லைக்கொண்டுபோய் மாட்டுக்குப்போட்டேன்
மாடு பால்கொடுத்தது
பாலைக்கொண்டுபோய் பாட்டிகையில் கொடுத்தேன்
பாட்டி அப்பம் தந்தாள்
அப்பத்தைக்கொண்டுபோய் காக்கைக்குப்போட்டேன்
காக்கை கரிதந்தது
கரியைக்கொண்டுபோய் கருமாணிடம் கொடுத்தேன்
கருமான் செம்புதந்தான்
செம்பைக்கொண்டு கடைக்காரனிடம் கொடுத்தேன்
கடைக்காரன் தேங்காய் தந்தான்
தேங்காயைக்கொண்டு கோவிற்குப்போனேன்
கோவில் எல்லாம் பாம்பாயிருந்தது
பாம்படிக்க கோலுக்குப்போனேன்
கோல் எல்லாம் தேனாயிருந்தது
தேனலம்ப குளத்துக்குப்போனேன்
குளமெல்லாம் மீனாயிருந்தது
மீன் பிடிக்க வலைக்குப்போனேன்
வலையெல்லாம் பொத்தலாயிருந்தது
பொத்தல் தைக்க ஊசிக்குப்போனேன்
ஊசியும் நூலும் உருமாறிப்போச்சு.

## விவேகசிந்தாமணிப் பரிசுகள்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர்கள் சிறுமிகள், மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் ஐந்து உறுப்புகளையும் தக்கபடி நன்ருக உபயோகிக்கக் கற்றுக்கொள்ளும்படிக்கும், அவர்கள் தங்களைச்சுற்றியுள்ள வஸ்துக்கள், விஷயங்கள் முதலியவற்றைக் கவனித்துப் பிரகிருதியின் சுபாவத்தை யாராய்ந்தறிந்து விவேக விர்த்தியடையும்படிக்கும் அவர்களைத் தூண்டுதற்பொருட்டு, மிஸ்ஸஸ் பிராண்டர் துரைசாணியவர்கள் ஒவ்வொரு மாதமும் சிருஷ்டிப்பொருள்களில் ஒவ்வொன்றைப்பற்றிப் பலகேள்விகள் போட்டு அக்கேள்விகளுக்கு தக்கபடி மிகவும் பூரணமாய் விடைகள் அளித்தெழுதுபவர்க்கு 2-ரூபாய் பரிசளிக்க இசைந்திருக்கின்றனர். இப்படி ஒவ்வொரு மாதமும் விவேகசிந்தாமணியை வாசிப்போர்க்குக் கிடைக்கக்கூடியதாக ஒருபரிசு அளித்துவருவார்.

அப்பரிசு பெறப் போட்டிபோட விரும்புகிறவர்கள் அந்தந்த மாதம் விவேகசிந்தாமணியில் பிரசுரிக்கப்படும் பரிசு விஷயத்தைக் கவனித்து அதற்கு தக்க விடைகள் எழுதியனுப்பவேண்டும்.

அப்படி யனுப்புகிறவர்கள் காகிதத்தின் ஒரேபக்கத்தில், வரிகோணமல், கிறுக்கல் குளரலின்றி பின்னலெழுத்தில் எழுதாமல் தெளிவாக எழுதியனுப்பவேண்டும்.

காகிதத்தின் இருபக்கத்திலும் எழுதியனுப்பப்படும் விடைகள் பார்க்கப்படமாட்டா.

விடைகள் எழுதின காகிதங்களை மடித்து இருபக்கமும் திறந்திருக்கவிட்டு 'புக்போஸ்டில்' அனுப்பிவிடலாம். (10-ரூபாய் எடைவரையில் தபால் சார்ஜ் அரையணு.)

விடைகள் எழுதியனுப்புகிறவர்கள் மேல்விலாசப் பக்கத்தின் தலைப்பில் "விவேகசிந்தாமணிப் பரிசுக்கு விடைகள்" என்று எழுதியனுப்பவேண்டும்.

விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர்கள், சிறுமிகள் எல்லாரும் இப்பரிசுபெற போட்டிபோடலாம்.

விடைகள் எழுதியனுப்பும்பொழுது ஒரு தனிக்கடிதத்தில் அதை யனுப்புகிற பெண் அல்லது பிள்ளையின் பேர், ஊர், விலாசம், வயது, வீட்டிலாவது பள்ளியிலாவது படித்து வந்தால் படிக்கும் வகுப்பு, வீட்டில் சொல்லிக் கொடுக்கும் வாத்தியார் அல்லது பள்ளிக்கூடத்தின் பேர் விவரங்களை தெளிவாய் எழுதி விடைகளோடு தைத்து அனுப்பவேண்டும்.

எல்லா விடைகளும் திருவல்லிக்கேணியில் விவேகசிந்தாமணி பத்திராதிபர் விலாசத்துக்கு அனுப்பப்படவேண்டும்.]

☞ ஏப்பிரல் மாசத்துப் பரிசு விஷயத்தைக்குறித்து எழுதியனுப்பப்பட்ட விடைகள் மதிப்பிடப்பட்டு வருகின்றன. அது விஷயமாய் எழுதிக்கொண்டிருப்பவர்கள் இன்னும் யாராவதுண்டானுல் சீக்கிரத்தில் முடித்தனுப்பவேண்டியதைப்பற்றித் தெரிவிக்கிறேம்.—வி. சி. ப.

### II.—மேமாசத்துப் பரிசு விஷயம். பூச்சிகள்.

1. எந்த எந்த இடங்களில் பூச்சிகளைக்காணக்கூடும்.
2. திறந்த வெளியில் வசிக்கும் பூச்சிகளுக்கும் சல், மரம், அலமாறி முதலான இவைகளின் கீழ்வசிக்கும் பூச்சிகளுக்கும் உள்ள முக்கியமான வித்தியாசங்கள் என்ன? உதாரணமாக, வண்ணுத்திப்பூச்சி, தட்டாரப்பூச்சி போன்றவைகளுக்கும் குளவி, வண்டு இவைபோன்றவைகளுக்கு முள்ள வித்தியாசமென்ன?
3. உங்களுக்குத் தெரிந்த பூச்சிகளில் நீராகாரமே புசித்து வசிக்கும் பூச்சிகள் எவை? கெட்டியாகாரம் தின்னும் பூச்சிகள் எவை?
4. வண்ணுத்திப் பூச்சிகளுக்கு ஆகாரம் எங்கேயிருந்து கிடைக்கின்றன?
5. அவை புஷ்பங்களிலிருந்து தான் ஆகாரந் தேடுகின்றனவென்று நீங்கள் நிச்சயமாய்ச் சொல்லக்கூடுமா?
6. அவை எல்லாவகைப் புஷ்பங்களிலும் போய் மொய்க்கின்றனவா?
7. ஒரே வண்ணுத்திப்பூச்சி பலவகைப் புஷ்பங்களில் போய்மொய்க்கப் பார்த்திருக்கிறீர்களா?
8. புஷ்பத்திலிருந்து அவைகளுக்கு ஆகாரம் கிடைக்கிறதாயிருந்தால் புஷ்பத்தின் எந்தப் பாகத்தில் அந்த ஆகாரம் நிறைந்திருக்கிறதாகத் தோன்றுகிறது.

குறிப்பு.—பரிசு பெறப் போட்டிபோடுகிறவர்கள் மேலே சின்ன எழுத்தில் அச்சிடப்பட்டிருக்கும் பரிசு விளம்பரவிதிகளை நன்ருகப்படித்துப் பார்த்து அவைகளை முற்றும் அனுசரித்தெழுதவேண்டியதைக் குறித்து ஞாபகப்படுத்தப்படுகிருர்கள்.

---

## பத்மினி கதை.

### தம்பி.

1. ஆரியநாட்டிற்பெருமையுறும் என
தன்பர்களேஉயர்நண்பர்களே
சீரியல்பண்டையவேந்தர்கட் குற்றது
செப்புவனேர்கதைஒப்புறவே.

2. பார்புகழ்இந்தியதேசமதின் வட
பாகத்திலுள்ளதொருநாடு
கார்தவழ்சோலைவயலுளதாம் புகழ்
காணும்உதயபுரியதுவாம்.

3. நாடதின்மன்னவர்க்ஷத்திரியர் கொடு
ராவணன்தன்சிரமன்றறுத்த
பீடுறுராமன்குலத்துதித்தோர் மன்னர்
போற்றியடிதொழஆண்டவராம்.

4. அன்னவரசரில்பீமசிங்கன் அறு
நூறுவருஷங்களுக்குமுன்னே
பொன்மலிசிற்றூரெனுநகரில் மிக
புகழ்பெறவேயரசாண்டுவந்தான்.

5. அம்முடிவேந்தனுக்கோரரசி விண்
ணரம்பையர்நாணும்நல்பேரெழிலாள்
செம்மைவாய்ராஜகுலக்கடலுக் கொரு
செல்விஇலக்குமியாயுதித்தாள்.

6. மன்மதன்தேவியைநேருருவாள் கலை
வாணியும்மெச்சுமருமதியாள்
பன்னருகற்பிலருந்ததியா ளவள்
பத்மினியென்னுமெழிற்பெயராள்.

7. மாதிவள்பேரழகெண்டிசையுங்கதிர்
[1]மானப்புகழதைவீசியதால்
மேதினிமன்னர் பலர்விரகம் எனும்
வெங்கடலாழ்ந்துதவித்தனர்காண்.

8. அக்காலத்தில்தில்லிமாநகரில் அர
சாண்டுவந்தான் [2]அல்லா'தீனனெனும்
சக்கிரவர்த்திபதிவீரன் கொடுஞ்
சண்டையில்வெற்றிகொள்சிங்கமன்னன்.

9. எங்கணும்தன்கொடிநாட்டுவித்துப் பல
ராஜர்கள்நாட்டைமிகக்கவர்ந்து
இங்கிதபத்மினிதன்னைக்கொள்ளக் கொடு
இச்சையைத்தன்மனங்கொண்டவனாய்

10. மன்னவ! பத்மினிதன்னைக்கொடாய், அது
மாளாதெனில்உன்றன்நாடதின்மேல்
[3]பன்னுக்கொடுரெங்கள்செய்ததுபா ழுறப்
பார்ப்பனனிக்கணமென்றுரைத்தான்.

11. சொல்லிதைக்கேட்டவத்தொல்குலத்தோன்-
சினந்தெனக்கென்னநீசெய்திடினும் [மிக
புல்லறிவாற்சொல்லும்சொற்கிணங்கே னுயிர்
போயினுமென்றனன்பீமசிங்கன்.

12. அல்லா'தீனுமிதைக்கேட்டுச்சினங் கொண்டே
ஆனதன் சேனைமிகத்திரட்டி
[4]ஒல்லையிற்சிற்றூர்நகர்க்குவந்து வளைந்
தொவ்வாக்கொடுரம்மிகவிளைத்தும்

13. அந்நகர்தன்னைக்கொளமுடியா தவன்
அயர்ந்துமன்னவரின்நாயகிதன்
மின்னெழில்தன்னையோராடி[1]யிற்காண்ப-
மிக்கமகிழ்வுடன்மீள்வனென்றான். [னேல்

14. அல்லா'தீன்மன்னனுரைக்கிசைந்தேயொரு
ஆடிகொணர்ந்ததில்மின்னுருவை
வல்லவன்பீமனுங்காட்டி முகமத
மன்னனைச்சற்றுவழிதொடர்ந்தான்.

15. கண்ணியஞ்செய்யத்தொடர்ந்தவனைக் கடு
காதகன்அல்லா'தீன்காவல்செய்து
வண்ணநின்னையகிதன்னைக்கொடாவிடில்
மாள்வைநீஇக்கணமென்றுரைத்தான்.

16. என்றதைக்கேட்டவனேங்கித்தவிக்கையில்
ஏந்திழையாளந்தபத்மினியும்
குன்றிசைதோளனென்நாதனைமீட்க விக்
கொடியன்கைவீழ்குவனென்றெழுந்து

17. வல்லமைவாய்பலவீரர்தமை மட
மாதர்களொக்கவுருத்தரித்து
அல்லா'தீன்மண்டபம்சென்றிடவு மவன்
"ஆயிழைதோழியரோடுவந்தாள்,

18. இன்றெனதாசைமுடிந்த"தென்று மிகும்
இன்பக்கடலதிலாழ்ந்திருக்க
நன்றெனச்சென்றவம்மெல்லிடைக்கு விடை
நல்கவந்தானவள்நாயகனும்.

19. வந்ததைக்கண்டவள்வீரரொடு பலம்
வாய் [2]தளைதம்மைக்கணமறுத்து
சந்தப்புரவிகளேறியவ ரந்த
தத்க்ஷணம்மீண்டனர்தம்நகரே.

20. அல்லா'தீன்மன்னனிதுகேட்டு முகம்
அனற்பொறிவீசமிகச்சினந்து
வல்லபெரும்படையோடுசிற்றூர் மீண்டும்
வந்துகொடுரேங்கள்மிக்கசெய்தான்.

21. ஆரியமன்னன்மிகக்கலங்கி இனி
யாவதுநம்மாலொன்றில்லையிந்த
வீரியனைப்புறஞ்செய்த லசாத்திய
மென்றுமனமதுவெந்துருக,

22. சொப்பனத்திலிஷ்டதெய்வம்வந்து மனம்
சோருமரச! நின்தொல்குலத்தில்
தப்பாதுபன்னிருபேரிறவா வரை
சாருமுன்மாநகர்நாசமென,

[1] மான = ஒக்க.
[2] அல்லாவுடின்.
[3] சொல்லக்கூடாத.
[4] சீக்கிரத்தில்.

[1] ஆடி = கண்ணாடி.
[2] தளை = விலங்கு. (பலம்வாய்ந்த விலங்கு)

23. மன்னவன்மக்களும்பன்னிருவர் மிக
வல்லமைமேன்மைவாய்வீரர்களாம்
"அன்னையைநின்னைநகரைப் புரந்திட[1]
ஐயனேமாய்வம்யாம்" என்று நின்றூர்.

24. நின்றபுதல்வரைக்கண்டரசன் மனம்
நொந்தினிச்செய்வதென் மாய்வரிவர்
என்றொருநாளொருமைந்தனைப் பன்னொரு
இனியதன்மக்களைமாளவைத்தான்.

25. மிஞ்சுமிளைஞனைக்கண்டரசன் மனம்
மிக்ககுழைந்தென்விழிமணியே
குஞ்சரமேநின்பதிலிறப்பேன் நீயும்
கொண்டிருப்பாயுன்றனல்லுயிரை ;

26. [2]சீதரன்கால்வழிவந்தவர்தந்த இச்
செங்கோலின்நாளும்பொறுத்திருந்தோம்
ஆதவதொல்குலக்ஷத்ரியராய்ப் பிறந்
தஞ்சுவமோநாமிறப்பதற்கே.

27. என்றந்தமன்னவன்தன்னகர்க்கண் முகில்
எற்குமலைத்தொடராழ்குகையே
சென்றடி[3]காஷ்டம்மிகப்பரப்பி அதி
செந்தணல்வீசஎரிவிடுத்தான்.

28. அங்கவர்க்ஷத்ரியமாதர்களே விரி
[4]யங்கண்விசும்பின்மீன்ராசியதாய்,
எங்கும்விளங்குசெந்திங்களதாய் பொலி
எந்திழைப்த்மினிமுன்னம்வந்து

29. எரியிற்புகுந்தனள்பெண்மணியும் அர
வேற்குமிளமதிபோன்றிடவே
புரியுங்கடவுளைநெஞ்சிருத்திப் பல
பேரானமாதரும்பின்தொடர்ந்தார்.

30. மாதர்களாகம்வெண்ணீருறவே உயர்
மன்னனும்நெஞ்சதிலஞ்சிலனுய்
தீதறஇனிஉயிர்மாய்த்திடுவேன் என
சீறியெழுந்தனன்சண்டைசெய.

31. சீராகக்ஷத்ரியப்போர்வீரர் எரி
சோர்ந்தமனைவியர்க்கேற்றகுறி
ஏறும்புரவிகள்மீதிருத்தி நக
ரேர்மதில்வாயிலெலாந்திறந்து

32. காலர்கள்போலாரவாரித்துப் பாய்ந்து
கடும்போர்விளைத்தவர்மாண்டனர்பின்
ஆலம்நிகர்அல்லாதீனுமுன்சென்று தான்
ஆசித்தபத்தினிமாண்டதினுல்

33. கொண்டவாசையும்வீணுகி மிக்க
குவியற்பணமும்பாழாகி
அண்டியமானமுங்கெட்டேங்கி நொந்தே
அன்னவனேகினன்தன்னகர்க்கே.

34. மன்னவனுசித்தபத்மினியும் பல
மாதரும்மாய்ந்தகுகைகள்தமை
இன்னுந்திறந்திலர்பூசைமிகப் பெறும்
யார்க்கும்பரிசுத்தமென்றிடுவார்.

இரா. சிவலிங்கம் பிள்ளை.

[1] புரந்திட = காத்திட.
[2] சீதரன் = இராமர்.
[3] காஷ்டம் = விறகு.
[4] ஆகாயநக்ஷத்திரக்கூட்டங்களைப்போல.

---

## உபாத்தியாயர் பக்கம்.

### கிண்டர்கார்டனைப்பற்றிப் பின்னும் சில விவரங்கள்.

கிண்டர்கார்டன் என்பது இல்லத்துக்கும் பள்ளிக்கும் நடுவிலுள்ள ஸ்தானத்ததாய் சிறுகுழந்தைகள் இல்லப்பயிற்சிக்குமேல் பள்ளிப்பயிற்சி பெறுவதற்கு அனுசரணையாய் அவர்களுடைய தேகமனோபாவங்களையறிந்து அவைகளை நல்வழியில் செலுத்தி அவர்களுடைய தேகம், புத்தி, ஆத்மா மூன்றும் ஒன்றையொன்றனுசரித்து நல்வழியில் விர்த்தியடையப் பார்த்துவரும் ஒரு நூதன ஸ்தாபனமாமென்று இதற்குமுன் இத்தலைப்பின்கீழ் சொல்லியிருப்பதால் விளங்கும். "தொட்டிற் பழக்கம் சுடுகாட்டுமட்டும்" என்று நமக்குள் சொல்வதுண்டு. இது ஓர் மகத்தான உண்மையை விளக்கும் வாக்கியம். இப்படிப்பட்டகாலத்தில் சிறுகுழந்தைகளுக்குப் படியும்பழக்கம் பின்னுல் அவர்கள் சாகுந்தனினும் அவர்களை ஒட்டிநிற்குமாதலால் இப்படிப்பட்டகாலத்தில் அவர்களுக்கு கெட்டவழக்கங்கள் படியாதபடிப் பாதுகாத்து நல்ல பழக்கவழக்கங்கள் படியும்படிக்கும் நல்ல எண்ணங்கள் உண்டாகும்படிக்கும் செய்ய வேண்டியது எவ்வளவு முக்கியமும் அவசியமுமான கடமை. இக்கடமையை நிறைவேற்றற் கேற்பட்ட சாதனமே **கிண்டர்கார்டன்** என்பது. மேலேசொல்லிய பழமொழியிலடங்கிய உண்மையை முற்றும் கிரகித்துணர்ந்தே **'ப்ரோபேல்'** என்னும் ஜர்மனி தேசத்து மகாவித்வான் குழந்தைகளைச் சரியாய்ப் பயிற்சிசெய்யும் இம்முறையைக் கண்டுபிடித்து அதற்குக் **கிண்டர்கார்டன்** என்று பெயர் கொடுத்தார். குழந்தைகளுக்கு பாலசிக்ஷைசெய்து பிரதமத்தில் வித்தை போதிப்பது நாகரீகவித்தையெல்லாவற்றிலும் சிறந்த வித்தை. இதையுணராது இத்தேசத்

இல் சொற்பவித்தை கற்றவர்களெல்லாம் பள்ளிக்கூடம் போட்டு சிறுவர்களுக்கு வித்தை போதிப்பதாகக் கிளம்பிவிடுகிறார்கள். இதனால் விளையும் கெடுதல் கொஞ்சநெஞ்சமில்லை. பாலப்பருவத்தில் தகுதியற்ற வாத்தியார்களால் போதிக்கப்படுவது அப்படி போதிக்கப்பட்ட குழந்தைகளுக்கும், அக்குழந்தையைச் சேர்ந்த குடும்பத்தோருக்குமட்டும் தீங்குவிளைப்பதாயின்றி இராஜாங்கத்துக்கே தீங்குவிளைப்பதாயிருக்கிறது. ஏனெனில் குழந்தை யெப்படியோ அப்படியே மனிதனுமாகிறான். பாலப்பருவத்தில் நல்லவழியில் திருப்பப்படாத புத்தி பிந்தி ஒருபோதும் நல்லவழிக்குவராது. இப்படிப்பட்டவர்கள் தான் பிந்தி திருடர், குடியர், குற்றஞ்செய்வோர்களாகி, இராஜாங்கத்தாருக்கு அளவற்ற தொந்திரவு கொடுத்துவருகிறார்கள். சிறுபிராயத்தில் ஒருகெட்ட குணம் அல்லது கொள்கை குழந்தையின் மனதில் படியவிட்டோமானால் அது பிந்தி கப்பும் கிளையுமாகப் பரவிச்செழித்து அளக்கமுடியாத கெட்டபலனைத்தரும். பிரதமவித்தியாசாலையில் நல்ல பலன் கிடைக்கவேண்டுமானால் பிரதம போதம் செய்யும் உபாத்தியாயர் தேகம், புத்தி, ஆத்மா மூன்றையும் நல்வழியிற் செலுத்தி விர்த்திக்குக் கொண்டுவருவதற்குத் தக்கயோக்கியதை யமைந்தவராக விருக்கவேண்டும். இது முற்றும் தானாக அமையக்கூடியதல்ல. சுபாவபுத்தி எவ்வளவுதான் அனுகூலம் செய்யக்கூடியதாயிருப்பினும் அது அவ்வேலைக்கு வேண்டிய வழியில் நன்றாகப் பழக்கிச் சீர்ப்படுத்தாவிடில் காரியத்தில் பயன்படாதொழியும். எந்தத் தொழிலும் கொஞ்சக்காலம் சிரமப்பட்டு முறையறிந்து கற்றுப் பழகினவருக்கே குறைவின்றி முற்றும் கையாடவரும். குழந்தைகளுக்குப் படிப்புச் சொல்லுவிக்கும் வேலை மற்றத் தொழில் வித்தைகள் எல்லாவற்றிலும் அதிக நுட்பபுத்தியும் சாமர்த்தியமு முபயோகிக்கவேண்டிய பெரியதொழில்வித்தையாதலால் அவ்வேலையிலமர்வோர் அதற்கு வேண்டியபடி பழக்கப்படாமல் அவ்வேலையிலமர்வது தீங்குக்கிடமேயாமன்றி வேறுபயன்தராது என்பது நிச்சயம். சீர்ப்பட்ட ஜனசமூகத்தில் ஜனக்ஷேமத்தை நாடியுழைக்கும் ஸ்தாபனங்கள் மூன்று. மதஸ்தாபனங்கள் ஜனங்களுடையமதக்ஷேமத்தையதாவது ஆத்மலாபத்தை நாடியுழைத்துவருவன. துரைத்தனம் அல்லது இராஜாங்கங்கள் ஜனங்கள் தேக க்ஷேமத்துக்கு வேண்டியவைகள் யாவற்றையும் நாடியுழைத்துவருவன. வித்தியாஸ்தாபனங்கள் ஜனங்களின் புத்திவிர்த்தியை நாடியுழைத்துவருவன. இம்மூன்று ஸ்தாபனங்களும் வெளிக்கு வேறுபட்டிருந்தாலும் இவைகளெல்லாம் ஒத்துழைத்து மனுஷன் மூன்று விதத்திலும் விர்த்தியடைந்து வந்தாலன்றி அவனுக்கு பூர்ணசுகம் சித்திப்பது துர்லபம். இம்மூன்று ஸ்தாபனங்களும் தங்கள் வேலையைச்சரிவர நடத்துவதற்கு அஸ்திவாரமாகவிருப்பது குழந்தைகளின் பிரதமப்பயிற்சி. ஆகையால் குழந்தைகளைப் படிப்பிக்கும் வகையில் அல்லது பிரதமவித்தை விஷயத்தில் மிகுந்த பாடுபட்டு அத்துறையில் எவ்வளவு நன்றாகவுழைப்பது சாத்தியமோ அவ்வளவும் நடக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டியது மனுஷஜாதியின் ஆத்ம க்ஷேமத்திற்கும் தேக மனோவிர்த்தி க்ஷேமத்துக்கும் இன்றியமையாததாயிருக்கிறதென்று ஏற்படுகிறது. மேலே சொன்ன மூவகை ஸ்தாபனங்களும் மற்ற விஷயங்களில் தங்கள் கடமைகள் என்னதான் வேறுபட்டிருப்பதாகப் பாவித்தாலும் குழந்தைகளுக்குப் பிரதம வித்தைபோதிக்கும் விஷயத்தில் எல்லாரும் ஒத்துழைக்கவேண்டிய தவசியமென்பதை யொத்துக்கொண்டிருக்கின்றன. பிரதம வித்தையில் அதிக பொறுப்போடு நம்மாலான முயற்சியெல்லாம் செய்து மிக்க பாடுபட்டுழைக்கவேண்டிய தவசியமென்று ஒப்புக்கொண்டாலும் கிண்டர்கார்டன் ஸ்தாபனங்களிலுள்ள சிலாக்கிய மென்னவென்றால், அது குழந்தைகளின் மேலான குணங்களை விர்த்திசெய்கிறது. அழுக்குப்படாத, தொட்டால் ஒட்டிக்குந் தன்மையுள்ள குழந்தைமனதில் சன்மார்க்க தத்துவங்கள் பதியச்செய்கிறது. அங்கே குழந்தைகள் மனதிலுண்டாகும்படி செய்யப்படும் எண்ணங்களும் நினைவுகளும் மனதை மேனோக்கிக்கொண்டு போவதோடு பின்னால் சகவாசதோஷத்தால் தெரியவரக்கூடிய துன்மார்க்க எண்ணங்களெல்லாம் எதுவும் நன்றாகப் பதியும் அக்காலத்தில் அவர்கள் மனதில் புகவிடாமல் தடுக்கத்தக்கவையாகவிருக்கின்றன. சிறு பிராயத்திலே கிண்டர்கார்டன் முறையினால் கை, கால், உறுப்புகளும் தேகமும் இலகுவாகவும் அழகாகவும் இயங்கப்பழக்கப்படுகின்றன. கிண்டர்கார்டன் வேலையினால் நேர்த்தியான கைப்பழக்கம் உண்டாகிறது; கண்களுக்கு எதையும்பார்க்க ஆயத்தமானசக்தியும், நுட்பசக்தியும் உண்டாகின்றன. மனோபாவ சக்திக்கு பலம் உண்டாகிறது. கிண்டர்கார்டன் விளையாட்டுகளும் ஆட்டங்களும் காலத்தைப்பற்றி நுட்பமான எண்ணமும், சங்கீத உணர்ச்சியும், குணமும் பிறருக்காகச் சிந்தனைசெய்யும் குணமும், எதனிடத்திலும் நல்லெண்ணம் பாராட்டுந் தன்மையும் உண்டாகச்செய்கின்றன. சாப்பாட்டு வேளையில் நன்றாய்ப்பழகின கிண்டர்கார்டன் வாத்தியார் கூடவிருந்து பார்த்துவந்தால் குழந்தைகளுக்கு நல்ல மா

திரிபடியும்; அந்நியோன்னிய சுபாவமும் தன்னிடத்துள்ளதைப் பிறர்க்கு பகிர்ந்து கொடுத்துண்ணும் குணமும் உண்டாகும். கிண்டர்கார்டன் ஸ்தாபனத்தில் பழகின குழந்தை தன்னயம் பார்க்கிற குணமுடையதாயிருக்கமுடியாது. இவ்வகை குணங்களும் இன்னுமிவைபோன்ற சத்குணங்களும் விர்த்தியாகப் பார்ப்பதோடு தேக சௌக்கியமும் கட்டழகும் விர்த்தியாகும்படி பார்த்துவரவேண்டு மென்பதே இந்த கிண்டர்கார்டன் முறையின் நோக்கமெல்லாம். கிண்டர்கார்டன் ஸ்தாபனத்தில் குழந்தைகளைச் சுற்றியுள்ளவைகள், வேலைசெய்யும் வகைகள், குழந்தைகளுடைய மனதிலே இவையெல்லாம் மேலே சொன்ன பூர்ணபலன் சித்திக்க உதவிசெய்யும் சாதகங்களாக அமைக்கப்பட்டிருக்கின்றன.

# சிறுவர்க்கானபக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

## மழைகால மித்திரர்கள்.

குழந்தைகளே!

"ஐப்பசி மாதத்தில் அடைமழை" என்பதை நீங்களெல்லாரும் கேட்டிருப்பீர்களே. ஒவ்வொரு தினத்தில் ஒரே மூட்டமாய் மூடிக்கொண்டு அசாத்யமாய் மழை ஊற்றும். காக்கை குருவிகள் எல்லாம் ஒரே அடியாய் மாண்டுவிட்டனவோ என்று சந்தேகிக்கும்படி ஒரு புள்ளினங்கூட தென்படாமலிருக்கும். நிரம்ப ஜலத்தைக்குடித்து காட்டெருமைபோல் கறுத்திருக்கும் மேகங்கள் ஆகாயத்தில் வேகமாய் ஓடும். சில வேளைகளில் அவைகளின்கீழ் பறக்கும் வெளுப்பான கொக்குக்கூட்டங்கள் பார்ப்பவர்கள் மனதைக் கவரும். லட்சம் சேர் வெள்ளியை உருக்கி வார்க்கும்போது குவளை முறிந்து சிதறின வெள்ளி ரசமே ரவை யுருவங்கொண்டாற்போல் ஆலங்கட்டிமழை கோயமுத்தூர் நீலகிரி முதலான இடங்களில் பெய்யும். மேகமென்னும் துணி கிழிந்து அதனுடைய நூல்கள் உதிர்ந்தனபோல தாரைகள்விழும். சோ என்று கொட்டும் மழையை உற்றுப்பார்த்தால் லட்சம் வெள்ளிக் கயிறுகளால்பூமியைக்கட்டி ஆகாசத்திற்கு இழுப்பது போல் கண்ணுக்குப் புலப்படும். சில சமயங்களில் சிதறி ஓடும் மேகங்கள் பார்வைக்கு பட்சிகள்போலும், மிருகங்கள்போலும் தென்படும். நாயகனைவிட்டுப் பிரிந்த நாயகி கதறுவதுபோல் மலையினுச்சியில் சில வேளைகளில் மேகங்கள் கர்ச்சிக்கும். இந்தகர்ச்சனையைக்கேட்டு அங்கிங்கு பதுங்கிக்கொண்டிருந்த காக்கை குருவி முதலிய பறவைகள் மருண்டு பறக்க ஆரம்பித்து மழையாலடிபட்டு மறுபடி போக்கிடமில்லாமல் தான் முன்னிருந்த இடத்திற்கே வந்து சேரும். சிலநாள் சூரியோதயமே யிருக்காது. சிலநாள் சூரியோதயம் நன்றாய்த் தென்பட்டு பொன்னுருகக்காயும். "பொன்னுருகக்காயும், மண்ணுருகப் பெய்யும்" என்பது ஐப்பசி மாதத்திய வெயிலுக்குண்டான பழமொழி. அவ்வளவு வெயிலடித்து உடனே மழைவரும். முன்னிலுமிரண்டுபெங்காய் கொட்டும்.

இந்த ஐப்பசி மாதக்கடைசியில் கொஞ்சம் மழை விட்ட ஒருநாள் ஜிலு ஜிலு என்று ஊதல்காற்று அடித்துக்கொண்டிருந்தது. கொஞ்சம் வெக்காளித்தாற்போலுமிருந்தது. 'அடைமழை நின்றும் செடி மழை நிற்கவில்லை' என்னும் பழமொழிபோல் அங்கங்கு கொஞ்சம் மரம் நிறைந்த நின்ற விடங்களில் சொட்டுச்சொட்டு என்று சொட்டிக்கொண்டு, வீர் வீர் என்று காற்றடிக்கும் போதெல்லாம் மழை மறுபடியும் பெய்கிறது என்னும் சந்தேகத்தை உண்டாக்கும்படி துளிகள் கல சல வென்று விழுந்துகொண்டிருந்தன.

விடாமழையில் அவஸ்தைப்பட்டுகொஞ்சம் மழை நின்று சூரியனும் புறப்படவே தங்கள் கஷ்டங்களை ஒருவாறு தீர்த்துக்கொள்ளலாம் என்று காக்கை குருவி முதலிய பட்சிகள் கொஞ்சம் வெளியேவந்து தங்கள் சிறகுகளை செவ்வையாக பலதடவை அசக்கி தண்ணீரைக் கீழே உதறி கொஞ்சம் பெருமூச்சுவிட்டன. மழையாலும் காற்றாலும் நொந்துபோன மரங்கள் அலுப்பு நீங்கி இளைப்பாறுவதுபோல் முகத்தில் பசுமையான குறிகளை வகித்துக்கொண்டு நின்றன. ஆனால் தினம் தங்களைச்சுற்றி ஓடும் ஈ, எறும்பு, கரையான், சிலந்தை, வண்ணாரப்பூச்சி, தேவடியாப்பூச்சி முதலிய தங்கள் பந்துக்களில் ஒன்றையும் காணவில்லை. கொஞ்சம் சிரமம் நீங்கி உட்கார்ந்திருக்கும் காலத்தில் யாராவது ஒரு கதை சொல்லக்கேட்டால் எவ்வளவு ஆனந்தமாகவிருக்கும். விருக்ஷங்களுக்கு அம்மாதிரி கதை சொல்ல ஒருவருமில்லையே; என்னபண்ணுகிறது? தங்கள்மேல் அப்போதைக்கப்

போது அடிக்கிற காற்றையும், இன்னும் கரையாமலிருக்கும் இரண்டொரு ஆலங்கட்டியையுந் தவிர வேறு ஒருவரையும் காணோம்.

விருக்ஷங்கள் காற்றைப்பார்த்து "காற்றே! காற்றே! கதை ஒன்று சொல்லேன்" என்று கேட்டன. அப்போது காற்றானது 'எனக்கு நிற்க ஒரு விநாடிகூட நேரமில்லை; உங்கள் மேலிருக்கும் நீர்த்துளியைக் கேளுங்கள்' என்று சொல்லிவிட்டு வேகமாய் ஓடிவிட்டன.

பிறகு விருக்ஷங்கள் நீர்த்துளியை நோக்கி "நீர்த்துளியே! நீர்த்துளியே! கதை ஒன்று சொல்லேன்" என்று கேட்டன. அதற்கு நீர்த்துளி: "நான் என்ன கதை சொல்லட்டும். நான் பிறந்த கதை சொல்லட்டுமா, வளர்ந்த கதை சொல்லட்டுமா. இப்போது இருக்கிற கதை சொல்லட்டுமா?" எனவே, விருட்சங்கள் எப்படியாவது இந்தக் காலத்திலும் நமக்குக்கதை சொல்ல ஒரு சிநேகிதன் அகப்பட்டானே என்று சந்தோஷித்து எந்தக் கதை சொன்னாலும் கேட்கிறோம் என்று சொல்லி எல்லாம் அசைவற்று அமர்ந்திருந்தன. இப்படி எங்கும் நிசப்தமாய் எல்லா விருக்ஷங்களும் கதைகேட்க சவனமாயிருக்கையில் நீர்த்துளி தன் கதையைப் பின்வருமாறு சொல்லத்தொடங்கிற்று.

## நீர்த்துளி சொல்லிய கதை.

"என்பேர் ஸ்படிகம். நானிப்போ ஜலபிந்துரூபமாயிருக்கிறேன். ஆனால் நான் *'அக்கிணியூண்டா'யிருக்கும்போது அதோ தெரிகிற மேகத்தின் வயிற்றில் கண்ணுக்குத் தென்படாதபடி இருந்தேன். என்னுடன் கூடப்பிறந்தவர்கள் ஓராயிரங்கோடி அக்
தங்கைகள் அண்ணன் தம்பிகள். நாங்கள் எல்
ரும் சேர்ந்து விளையாடின விளையாட்டுகளுக்குக்
க்கேயில்லை. விளையாடி ஓய்ந்தபோதெல்லாம்
கம்மாள் எங்கள்பாட்டி பூமிதேவியைப்பற்றி கதை
ால்லுவள். பூமியிலே எவ்வளவோ வேடிக்கை
நக்கிறது என்று எங்கம்மாள் சொல்லுவள். அப்
அடிக்கடி அவள் சொல்லவே எங்களுக்கு எங்கள்
ட்டியைப்போய்ப் பார்க்கவேண்டுமென்ற ஆசை
குவாய் வந்துவிட்டது. அப்போ எங்கம்மாள்
வசரப்படவேண்டாம, அவசரப்படவேண்டாம்,
பாறுங்கள், பொறுங்கள், காலம் வரும்போது
போசலாம்' என்பாள். அவளுத்தரவுப்படி எத்தனையோநாள் காத்திருந்தோம். ஒருநாள் எங்கம்மாள் வெகு பறபறப்பாய்வந்து எங்களையெல்லாம்பார்த்து என் கண்மணிகளே புறப்படுங்கள். பாட்டி உங்களை சீக்கிரம் வரும்படி சொல்லியனுப்பியிருக்கிறாள். எல்லாரும் உடனே புறப்படவேண்டும் என்றாள். நாங்களிந்த சமாசாரம் கேட்டவுடனே களித்தோம், சிரித்தோம், கூத்தாடிக் குதித்து சப்தஞ்செய்தோம். உடனே அம்மாளிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டோம்.

நடுவழியில் நாங்கள் எங்கள் மாமாவைப்பார்க்கப்போனோம். வெகு பரபரப்பாய் நாங்கள் வந்ததைக்கண்டு அவர் ஆச்சரியப்பட்டு எங்குபோகிறீர்கள் குழந்தைகளே என்றுகேட்டார். பாட்டியைப் பார்க்கப்போகிறோம் என்று நாங்கள் சொன்னவுடனே எங்கள் மாமா உங்கள் உடுப்பு நன்றாயில்லையே. பாட்டி ஊரில் எல்லாரும் பரிகாசம் பண்ணுவார்களே. உங்களுக்கு நல்ல உடுப்புப்போட்டு அனுப்புகிறேன் என்றுசொல்லி எங்களுக்கெல்லாம் நல்ல வெளுப்பான உடுப்புப்போட்டு எங்களைக் கீழே அனுப்பினார்.

அந்த வெள்ளையுடுப்புடன் வேகவேகமாய் பாட்டி பூமியை நோக்கிவந்தோம். பல்பேர்கள் பல இடங்களில் விழுந்தோம். நானும் என் தங்கை, தம்பிகள் சிலரும் ஒரு ரஸ்தாவில் விழுந்தோம். ஒருவர்மேலொருவர் அடர்ந்து விழுந்தபடியால் சாவகாசமாய் சுற்றிப்பார்க்க முடியவில்லை. எங்கம்மா, பாட்டியூரில் நல்ல புஷ்பங்கள், விதம்விதமான மரங்கள், பட்சிகள் உண்டு என்று சொல்லியிருந்தாள். எனக்கு விழுந்த இடத்தைவிட்டு நகர்ந்துபார்க்க ஆசைதான். எப்படி நகருகிறது.

இப்படியிருக்கும்போது ஒரு சத்தங்கேட்டது. ஏதோ ஒரு ஜந்து என்னை தன் கையிலெடுத்து உடைத்து வீசிஎறிந்தது. யார் அந்தப் பிராணி என்று விசாரிக்கும்போது ஒரு பையன் என்று தெரியவந்தது. அம்மாதிரி எரியப்பட்டு என் தம்பி தங்கை எல்லாரையும் விட்டுப்பிரிந்து நான் மறுபடி கீழே விழுந்தேன். விழுந்தவுடனே 'வா அண்ணா வா' என்று ஒரு சத்தம் கேட்டது.யார் நம்மை அண்ணா என்று கூப்பிடுகிறார்கள் என்று திரும்பிப்பார்க்கையில் அழுக்குப்படிந்த ஒரு தண்ணீர்க்குட்டை தென்பட்டது. நானாவது உனக்கு அண்ணனாவது உங்கள் உடுப்புகள் எவ்வளவு அவலட்சணம் என்று நான் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே என்னை அவர்கள் இழுத்துக்கொள்ள; என் வெள்ளை உடுப்புப்போய் என் மேனியெல்லாம் அவர்களைப்போல அழுக்குப் படிந்த பழுப்பு நிறமாய்விட்டது.

எனக்கா துக்கம் பொறுக்கக்கூடவில்லை. என்னை அண்ணா என்று கூப்பிட்டவர்களோ அவ்வளவு சர்வமா என்று சிரிக்கிறார்கள். நான் அழ ஆரம்பித்தேன். முதலில் கேட்பாரில்லை. அகதிக்குத் தெய்வமே துணையென்று நினைத்துப் பின்னும் நான் வருந்திக்கொண்டிருக்கையில் "ஏனழுகிறாய் குழந்தாய்,

---

* குழந்தைகள் பேச்சில் அதிநுட்பமான பொருளைக்
ித்துக்காட்ட உபயோகப்படுத்தப்படும் சொல்.

உனக்கு என்னவேண்டும்'' என்று ஒரு சத்தங்கேட்டது. யார் இப்படி நம்மிடத்தில் இரக்கப்பட்டுக்கேட்கிறார்கள் என்று நானந்தப்பக்கம் திரும்பிப்பார்க்கவே நல்ல உருண்டைவடிவமாய் சிரிப்பு முகமாய் அதிக தேஜஸோடுகூடிய ஒருவரைக் கண்டேன். அம்மாள் சூரியபகவான் என்று அடிக்கடி சொல்லியிருக்கிறாளே, அவர் இவர்தான் என்று அறிந்துகொண்டேன். உடனே நான் சூரியபகவானைப்பார்த்து இந்தக் குட்டைத் தண்ணீர் என் நல்ல உடுப்பை எல்லாம் பிடுங்கிக்கொண்டு என்னுடம்பையும் பழுப்புநிறமாக்கி என்னை அவமானம் பண்ணிவிட்டது. பாட்டியைப் பார்க்கவேண்டுமென்று வந்தவிடத்தில் எனக்கு இந்த அவகேடு சம்பவித்துவிட்டது. எனக்கு பழயபடி வெள்ளை யுடுப்புக் கொடுத்து எங்கம்மாள் ஊருக்கு நீங்கள்தான் அனுப்பவேண்டும் என்றேன். அதற்கு சூரியபகவான், உங்கள் ஊரின்பேர் என்ன, உங்கம்மாள் பேர் என்ன சொல் பார்ப்போம் என, நான் எங்கம்மாள்பேர் மேகநாயகி அவளிருக்கும் ஊர் மேகமண்டலம்; அங்கே நான் போகவேண்டும். இந்த அழுக்குடையைப் பார்த்தால் எங்கம்மாள் கிட்டவராதே என்பளே நான் என்னசெய்வேன். எங்கள் மாமா கொடுத்த வெளுப்புடையை வாங்கித்தந்து, என்னையும் எங்கம்மாளண்டை கொண்டுபோய் விடவேண்டுமென்று சூரியபகவானை வேண்டிக்கொண்டேன். அதற்கு அவர் உங்கள் மாமா கொடுத்த வெளுப்பு உடுப்பு தர என்னால்முடியாது. ஆனால் உங்கம்மாளிடத்திலிருந்தபோது நீங்கள் தரித்திருந்த புகை உடுப்பு தருகிறேன். அதை யுடுத்திக்கொண்டு நீ உங்கம்மாளிடத்தில் போகலாம் என்று சொல்லி அவர் என்னை முத்தமிட்டார். அந்த மஹான் அப்பட்டி முத்தங்கொடுத்தவுடன் எனக்கு புகை உடுப்பு வந்துவிட்டது: நான் அழுக்குடையைக் களைந்து குட்டையில்தானேயெறிந்துவிட்டு ஆவிரூபமெடுத்து எங்கள் மாமா தோளிலேறிக்கொண்டு வேக், வேக், வேக் என்று வானத்திலேறி எங்கம்மாளிடம் போய்ச்சேர்ந்து எல்லாக் கதையுஞ் சொன்னேன். அம்மாளைக்கண்ட சந்தோஷத்தில் நான் பாட்டியூரில்பட்ட துக்கத்தை எல்லாம் மறந்துவிட்டேன். பாட்டியூருக்குப்போனால் திரும்பிவர வழியிப்படியென்று தெரிந்தபின் 'சரி, இனிமேல் தைரியந்தான். எத்தனை தடவை பாட்டியிடம்போகச்சொன்னாலும் பயமின்றிப்போய் வரலாம்' என்று தீர்மானித்தேன். இவ்வளவுபோதும். நானினிமேல் கதைசொல்லமாட்டேன்'' என்று **ஸ்படிகம்** என்ற நீர்த்துளி தன்வாயை மூடிக்கொண்டது.

இந்தக் கதை கேட்கும் சந்தோஷத்தில் அந்த மரங்கள் எல்லாம் காலம்போனதே தெரியாமலிருந்தன. **ஸ்படிகம்** திடீரென்று கதையை நிறுத்தி குணக்குவந்த குழந்தைபோல் வாயைமூடிக்கொண்டதும் அவை தங்களைச்சுற்றிப் பார்க்கும்பொழுது தங்கள்பேரிலிருந்த மற்ற நீர்த்துளிகளையெல்லாம் காணோம். இதென்ன இங்கேயிருந்த நீர்த்துளிகளெல்லாம் எங்கேபோயினவென்று அதிசயித்து பிரமித்து நன்றாய்ப் பார்ப்போமென்று கண்களைத்துடைத்துக் கொள்வனபோல் பச்சை இலைகளை ஒன்றின்மேல் ஒன்றுபட அசைத்து பின்னும் நன்றாய்ப் பார்ப்பனபோல் சற்று அசைவற்று நின்றன. கதைசொன்ன நீர்த்துளியாகிய **ஸ்படிகமும்** அதற்குள் காணமற்போயிற்று. விருக்ஷங்கள் இதென்னவென்று கண்களை நன்றாக விழித்துக்கொண்டு ஆகாசத்தைப்பார்க்க சூரியன் நன்றாய் உதித்து பிரகாசித்துக்கொண்டிருந்தான். மரங்களும் தங்கள் பசுமையின் அழகைக்கண்டு நாள் முடியக்களித்துச் சந்தோஷத்துடனிருந்தன.

---